# தென்கீழ்க் கடற்கரைத் தேவாரத் திருத்தலங்கள்



க. சேகர், எம்.ஏ., எம்ஃபில்.,

உ

சிவமயம்

# தென்கீழ்க் கடற்கரைத் தேவாரத் திருத்தலங்கள்

கு. சேகர், எம்.ஏ., எம்ஃபில்.,

தமிழ்மலர் பதிப்பகம்
5-8, தீவம்பாள் புரம்
திருத்துறைப்பூண்டி - 614 715.



திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின்
நிதியுதவி பெற்று வெளியிடப்
பெற்றது.

# உள்ளுறை

---



---

# அணிந்துரை

பேராசிரியர்,
**டாக்டர் பொன். சௌரிராசனார்,**
தமிழ்த்துறை,
திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி-517 502.

சங்கம் மருவிய காலத்தையடுத்த களப்பிரர் காலத்தில் தமிழ் ஆட்சிமொழி செல்வாக்கை இழந்துவிட்டது. பாகத மொழியில் ஆட்சி நிகழ்ந்தது. தமிழர் தம் வாழ்வியல் பண்பாடுகளும், சிந்தனைகளும் சமண பௌத்த கொள்கைகளின்வழி தம் செல்வாக்கை நிலை நிறுத்திக் கொள்ள முயன்றன. அப்போது தமிழர்தம் இல்லற வாழ்க்கைநெறி, பண்பாடு ஆகியனவற்றை அறன் செய்துகொள்ள 'பக்தி இயக்கம்' தோன்றிற்று. பக்தி இயக்கச் சான்றோர்கள் மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றிப் பாடிப்பாடி அங்கங்கு வாழும் மக்களையும் பாடுவித்துப் பரமனைத் தங்களோடு பரவி வழிபடுமாறு செய்யலாயினர். இவ்வாறு சிவபெருமானை நினைந்து பாடப்பெற்ற பாடல்கள் பல்லாயிரக் கணக்கில் இருந்தன அவையெல்லாம் தேவாரங்கள் என்று போற்றப்பெற்றன.

இத்தேவாரப் பாடல்களைப் பெற்ற தலங்கள் 'பாடல் பெற்றத் திருத்தலங்கள்' என்று சிறப்பித்து உரைக்கப் பெற்றன அத்தகு திருத்தலங்கள் 274 ஆகும். அவற்றுள் தென்கிழ்க் கடற்கரைப் பகுதியில் அமைந்த 'திருக்துறைப் பூண்டி' வட்டாரத்தைச் சார்ந்த ஏழு கோயில்கள் பற்றித் திரு. கு. சேகர் எழுதிய இந்நூல், திருத்தங்கூர், கச்சனம், சித்தாய்மூர், தண்டலைச்சேரி, கற்பகநாதர்குளம்,

இடும்பாவனம், கோயிலூர் என்னும் ஏழு கோயில்களின் இடச்சூழ்நிலைகள், காலச்சூழ்நிலைகள், கோயிலமைப்பு தெய்வத்திருமேனிகளின் சிறப்பு அக்கோயில்களில் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டுகள், அவற்றின் வழி அறியலாகும் வரலாறு, சமுதாயம், சமயம் பற்றிய செய்திகளைத் திறம்படத் தெளிவாக எடுத்துரைக்கிறது. இக்கோயில்கள் குடிகொண்டுள்ள ஊர்களின் பண்டைய பெருமைகளை இந்த நூல் குறிப்பிடுகிறது. இதன்வழி, நம் முன்னோரின் வாழ்வியல் சிறப்பை அறிந்துகொள்ள இயலுகிறது.

இந்நூல் இவரது முதல் நூல். இது திருவேங்கடவன் திருவருளோடு, அவன் பொருள் வளமும் பெற்று உருவாகியது. இதன்வழி இந்த இளைஞர் பல நூல்களைத் தமிழுக்கு, தமிழர்க்கு நலமும், வளமும் சேர்க்க எழுதிச் சிறக்குமாறு வாழ்த்துகிறேன். இவர் தம் முதல் நூலாக அமைகின்ற இதனை ஏற்று, தமிழ்மக்கள் போற்றுவதன் வழி ஒரு நல்ல எழுத்தாளன் தமிழ் மக்களால் இனங்கண்டு கொள்ளப்படுவான் என நம்புகிறேன்.

திருப்பதி
30—11—91

பொன். சௌரிராசன்

# என்னுள்ளே.....

'திருக்கோயில்களின் தாயகமாம்'
தஞ்சைத் தரணியில்
திருத்துறைத் திருநகரில்
பிறந்து வளரும்
பேறு பெற்றேன்.

சைவ நெறிபரப்பும்
திருத் தருமையில்
தெய்வத் தமிழ்கற்று, தகுதியுற்றேன்.
தமிழ்ப் பயிலும் காலத்தில்
தமிழில் மட்டுமல்ல
சமயத்தின் பாலும் ஆராக்காதல் கொண்டேன்.

இதனால்,
திருக்கோயில்கள்-எனது
தவக்குடில்களாயின.
அக்கலைக் கூடங்கள்-எனது
ஆராய்ச்சியின்
பொருள் கூடங்களாகவும்
போற்றப் பெற்றன.

என் மூதாதையர்,
கல்லில் வடித்தெடுத்தக்
கலைக் காவியத்தைச்
செம்பில் வார்த்தெடுத்தச்

சுவைக் காப்பியத்தைக்
கண்ணுறும் நேரமெல்லாம்
நூலுறும் காலம்தன்னை
நெஞ்சம் தேடும் ... ...

ஆலகாலப் பசிக்கு
அமுது கிடைத்ததுபோல்,
இந்நூல் உருவாகக்
கற்பகத் தருவாகி
பொருள் வழங்கியுதவிய
அருள்தமிழ்ப் பண்ணை
**திருமலை - திருப்பதி**
**தேவஸ்தானத்திற்கு** என்றும்
நன்றிக் கடப்பாடுடையேன்.

இந்த
வசந்த ராகத்தை
வாசிக்க உதவிய
'வளர் தமிழ் அரசு'
சப்தகிரி இணையாசிரியர்
**திரு. என். எஸ். இராமமூர்த்தி** அவர்களுக்கு
அன்பின் நன்றி!

என்
கன்னி முயற்சிக்குக் கைக்கொடுத்து
கருத்துக்கள் சிறந்திட களமமைத்து
அணியுறும் அணிந்துரை அன்புடன் ஈந்து
இந்நூலின்வழி இலக்கியஉலகுக்கு அறிமுகப்படுத்தி
எந்தையும் தாயுமாயிருந்து
என்னை உருவாக்கும்

'என் அறிவுலக ஆசான்'
பேராசிரியர், டாக்டர், பொன். சௌரிராசனார்
எம். ஏ. பிஎச். டி.
அவர்களுக்கு அகங்கனிந்த நன்றி!

திருக்கோயில்களை
ஆய்வுக்குரிய தலைப்புகளாயீந்து
ஆற்றல் படுத்தியதோடு,
என் முயற்சிக்கும், வளர்ச்சிக்கும்
களன் அமைத்துத்தந்து
என்றென்றும் ஆற்றுப்படுத்தும்
'இலக்கிய உலகின் எழுஞாயிறு'
பேராசிரியர், டாக்டர், மா. இராமலிங்கம்
எம்.ஏ., பி.எச் டி அவர்களுக்கு
நன்றி பாராட்டக் கடன்பட்டுள்ளேன்.

அன்பு வேண்டுதலுக்கு
அகமுற இசைந்து
கடினப் பணிகளுக்கிடையிலும்
காலம் நீட்டாது
அச்சுப் பகுதிகளை
அழகுறத் திருத்தி
இவ்வினிய நூலுருவாக
அருந்துணை புரிந்த அன்பு நண்பரும்,
தருமபுரம் ஆதீனம் கலைக் கல்லூரி பகுதிநேர
விரிவுரையாளருமான திரு. சுபா. சிவநேசன்,
எம்.ஏ., எம்.ஃபில்., பி எட்
அவர்களுக்கும் நன்றியுரியது

என்
இலக்கிய முயற்சியில்

புத்தொளி யூட்டி
புதுப்பாதை வகுத்த
அன்பின் 'நந்தாவிளக்கு'
திரு. **கே. இராஜசேகர்** எம்.காம். அவர்களுக்கும்
நன்றி உரியது.

சின்னப் பொழுதுகளில்
சேர்த்து வைத்த
சிந்தனை முத்துக்களைக்
குறுகிய காலத்தில்
அழகிய மாலையாக்கி
அன்புடன் வழங்கிய
கணபதி பிரிண்டர்ஸ் உரிமையாளர்
திரு. **எஸ். சீத்தாராமன்**, பி.எஸ்.சி.,
அவர்களுக்கு நனி நன்றி!

இவ்வினிய நூல்
உருப்பெறக் காரணமான
அத்துணை அன்பு நெஞ்சங்களுக்கும்
நன்றி தெரிவித்து மகிழ்கிறேன்

அன்புடன்
**க. சேகர்**


**கருணாசேகர்**, எம்.ஏ.எம்.ஃபில்,
திலம்பாள்புரம் (அஞ்சல்),
திருத்துறைப்பூண்டி - 614715,
காயிதே மில்லத் மாவட்டம்.

# தென்கீழ்க் கடற்கரைத் தேவாரத் திருத்தலங்கள்

*''மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த்*
*தொடங்கினார்க்கோர்*
*வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''*

எனும் தாயுமானவர் பாடல் மூலம் 'அடியார்களுக்கு அருள் வழங்கும் இறையாகிய மூர்த்தியும், அம்மூர்த்தியின் நினைவாகக் கொள்ளப்பட்டு வழிபடப்பட்டு வரும் மூர்த்தமும் (திருமேனி), அவன் குடிகொண்டுள்ள திருவூரும் (தலம்), அவ்வூரின்கண் காணப்படும் தூய நீர் நிலையாகிய தீர்த்தமும் (குளம், ஆறு) வணங்கி வழி படுதலை முறையாகச் செய்தொழுகுவார்க்கு நற்குருவின் திருவருள் வாய்க்கும்' என்பதை அறிய முடிகிறது. மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் முறையான அமைப்புடனும், சிறப்புடனும் வானுயர்ந்த கோபுரங்களுடனும் அமைந் திருக்கும் திருத்தலங்கள் நம் நாட்டில் எண்ணிறந்தவை.

**திருக்கோயில் ஏன்?**

அரிய முயற்சியோடும் அளவற்ற பொருட் செல வோடும் வியப்பூட்டும் வண்ணம் கலைக்கூடங்களாக விளங்கும் இத்திருத்தலங்கள் எண்ணற்றவையாகத் தோற்றம் பெற்றிருப்பதின் காரணம் என்ன? எங்கு நோக்கினும் கோயில்கள் எனும் அளவிற்கு இலட்சக் கணக்கான திருக்கோயில்கள் எழுப்புவிக்கப் பெற்றதின் இலட்சியம் என்ன?

தெய்வீக சக்தியை வகைப்படுத்திக் காட்டவும், அதனை வழிபடுதற்கு ஒருவழி முறையினை அமைக்கவும்,

சமுதாயத்தை ஆட்கொள்கின்ற தெய்வீகசக்தியைத் தேக்கி வைக்கவும் ஒரு இருப்பிடமாக, இதயமாகத் திருக்கோயில்கள் விளங்குகின்றன என்பனவே அவை தோன்றியதற்கான முக்கியமான காரணங்களாகும். இதனை எண்ணியே நம் முன்னோர்கள் ஊர்தோறும் கோயில்களை எழுப்பும் முயற்சியை மேற்கொண்டனர்.

இம்மேற்கண்ட கருத்தையே சிவஞானப்பிரகாச வெண்பா ஒன்று உணர்த்துகிறது. அப்பாடல்,

"எங்கும் சிவனிருப்பான் ஆனாலும் ஏசற்ற
சங்கமத்தும் சற்குருவின் தன்னிடத்தும் லிங்கத்தும்
ஆவினுடம் பெல்லாமும் ஆவரித்து நிற்கினும்பால்
பாவு முலைக்கண் மிகுதி பார்"

பசுவின் உடலில் பால் மறைந்திருந்த போதிலும் மடியிலுள்ள காம்புகள் மூலமே பால் வெளிப்படுகிறது. அது போல இறைவன் எங்கும் நிறைந்திருக்கின்ற போதிலும் திருக்கோயில்கள் மூலமே வெளிப்படுகிறார் எனவே, திருக்கோயில்களில் இறைவன் அருள்வடிவாக இருந்து தன்னைத் தேடிவரும் அடியார்களை ஆட்கொள்கிறார் என்பதை அறியலாம்.

**திருக்கோயிலின் இன்றியமையாமை :**

உலக வாழ்க்கையில் சோதனைகளுக்கு ஆட்பட்டு துன்பத்தில் உழலுகின்ற மனித உயிர்களுக்குத் திருக்கோயிலே ஆன்மஞானத்தை அருளுகின்றன. சமயம் மனித வாழ்க்கையோடு இரண்டறக் கலந்திருந்தது. சமயமும் சமுதாயமும் இணையும் இடமாகத் திருக்கோயில் விளங்கியது. இதனால் கோயிலைத்தழுவிய குடிகளும், குடிகளைத்தழுவிய கோயிலுமாகச் சிறப்புப் பெற்றன. அகப்பிணியோடு புறப்பிணியையும் நீக்கும் மருத்துவச்சாலைகளாகவும், நிலை பிறழாமல் நீதி வழங்

கிடும் நீதி மன்றங்களாகவும், பசிப்பிணி நீக்குகிற அறச் சாலைகளாகவும் திருக்கோயில்கள் விளங்குகின்றன. எனவே, திருக்கோயில்கள் மக்கள் வாழ்வின் உயிர் மூச்சாக, உய்வளிக்கும் அருட்கூடமாக, அறிவாலயமாக விளங்கி வந்திருக்கின்றன என அறியலாம்.

இதன் இன்றியமையாமையை உணர்ந்ததாலன்றோ சான்றோர், 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்றனர் ஔவை மூதாட்டியும் 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்று தனது ஆத்திசூடியின் மூலம் அறிவுறுத்துகிறார். இதனை எண்ணியே நாவுக்கரசர் திருக்கோயில் இல்லாத ஊரைத் 'திரு இல் ஊர்' என்கிறார்.

"திருக்கோயில் இல்லாத திரு இல் ஊரும்
திருவெண்ணீர் அணியாத்திரு இல் ஊரும்
பருக்கோடிப் பத்திமையில் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அரும்போடு மலர் பறித்திட்டுண்ணா ஊரும்
**அவை எல்லாம் ஊரல்ல அடவிக்காடே"**

திருக்கோயில் இல்லாத ஊர் திரு இல்லாத ஊர்மட்டுமல்ல 'அடவிக்காடு' என நாவுக்கரசர் பெருமான் வன்மையாக அறிவுறுத்துவதிலிருந்து திருக்கோயிலின் இன்றியமை யாமையை உணரலாம்.

**திருக்கோயில் நிறுவுவதின் நோக்கம் :**

நம் நாட்டின் எண்ணரிய சிறப்புக்கும், ஈடில்லா புகழுக்கும் காரணமாக இருப்பது திருக்கோயில்களே. இத்திருக்கோயில்களைச் சார்ந்தே மக்களின் வாழ்க்கை முறை வளர்ந்து வந்திருக்கின்றது. திருக்கோயிலின்

தேவையைத் தெள்ளிதின் உணர்ந்த மக்களும், மன்னர் களும் திருக்கோயில்களை நிறுவுவதே தம் வாழுங் காலத்தின் இலட்சியமாகக் கொண்டனர்.

'உலக உயிர்களின் விருப்பம் பூர்த்தியடையும் பொருட்டு இத்திருக்கோயிலை எடுப்பித்தேன்' என இராசசிம்மன் கல்வெட்டு ஒன்று கூறுகிறது எனவே, திருக்கோயில் மக்களின் பக்தியை வளர்க்கவும், அவர் களிடம் அருள், அன்பு கூர்ந்த வாழ்க்கை வளர்வதற்கும், இறைக்கொள்கையை உணர்த்தும் பொருட்டும், ஒற்றுமையை வளர்க்கும் நோக்கத்துடனும் அவர்கள் விருப்பத்திற்கு இணங்கத் திருக்கோயில் கட்டப்பெற்று வந்திருக்கின்றன என்பது வரலாறு கூறும் உண்மையே ஆயினும் அவற்றின் அடிப்படையில் ஆன்மீக முன்னேற்றமே முதன்மை பெற்று விளங்கக் காணலாம்.

**தென்கீழ்க் கடற்கரைத் தேவாரத்திருப்பதிகள் :**

இவ்வாறு மிக உயர்ந்த கோபுரங்களைக் கொண்ட திருக்கோயில்கள் இந்தியத் திருநாடெங்கும் நிறைந்து காட்சியளிப்பதைக் காணலாம். அதிலும் தமிழ் நாட்டில் தெய்வீக உணர்வோடு ஊர்தோறும் எண்ணிறைந்த திருக்கோயில்கள் இலங்குவது கண்கூடு. தமிழ்நாடே திருக்கோயில்களின் தாயகம் எனக்கூறும் அளவிற்கு எண்ணற்ற திருக்கோயில்களைக் கொண்டிலங்குவது தஞ்சை (தஞ்சாவூர்) மாவட்டம் ஆகும்.

இம்மாவட்டத்தில் கடற்கரையை ஒட்டிய தலங்கள் பல உள்ளன. அவற்றுள் திருத்துறைப்பூண்டி வட்டாரத் திலும் சிறப்புடைய திருக்கோயில்கள் சில இடம் பெற்றுள்ளன.

இத்திருத்துறைப்பூண்டி வட்டாரமானது நஞ்சையும், புஞ்சையும் கொஞ்சி விளையாடும் தஞ்சைப் பகுதியின்

தென்கிழக் கோடியில் உள்ளது. காவிரியின் கிளை நதிகள் பாய்ந்து இவ்வூரை வளம் கொழிக்கச் செய்கின்றன. இவ்வட்டாரத்தில் எங்கு நோக்கினும் திருக் கோயில்களின் திருக்கோபுரக்காட்சிகளே நம் கண்ணுக்குப் புலப்படுகின்றன. இவற்றில் சைவத் திருக்கோயில்கள் ஏறக்குறைய அறுபதும், வைணவக்கோயில்கள் ஏறக்குறைய இருபதுக்கு மேற்பட்டும், சிறு தெய்வக் கோயில்கள் ஏறக்குறைய நூற்று ஐம்பதுக்கு மேற்பட்டும் அமைந்திருக்கின்றன.

திருத்துறைப்பூண்டி வட்டாரம் என்பது மூன்று ஊராட்சி ஒன்றியங்களையும், இரண்டு பேரூராட்சிகளை யும், எழுபத்தைந்து கிராமப் பஞ்சாயத்துக்களையும், எண்பத்து நான்கு வருவாய்த்துறை கிராமங்களையும் உட்கொண்டது. இதன் மக்கள் தொகை ஒரு இலட்சத்து தொண்ணூற்று இரண்டாயிரத்து எண்ணூற்று முப்பத்து ஆறு. இதன் பரப்பளவு நாற்பத்தைந்தாயிரத்து இரு நூற்று முப்பத்து நான்கு ஹெக்டேர். கி. மீ.

திருத்துறைப்பூண்டி வட்டாரத்தில் தென் கிழக்கடற் கரையை ஒட்டிய தேவாரத்திருத்தலங்கள் ஏழு மிகச் சிறந்த தலமாகப் போற்றப்பெறுகின்றன. அவை, (1) திருத்தங்கூர் அருள்மிகு வெள்ளிமலை நாதர் திருக் கோயில் (2) கச்சனம் அருள்மிகு கைச்சினனேசுவரர் திருக்கோயில் (3) சித்தாய்மூர் அருள்மிகு பொன் வைத்த நாதர் திருக்கோயில் (4) தண்டலைச்சேரி அருள்மிகு நீதிநெறிநாதர் திருக்கோயில் (5) கற்பகநாதர்குளம் அருள்மிகு கற்பக நாதேசுவரர் திருக்கோயில் (6) இடும்பா வனம் அருள்மிகு சற்குண நாதர் திருக்கோயில் (7) கோயிலூர் அருள்மிகு மந்திரபுரீசுவரர் திருக்கோயில் என்னும் ஏழுதலங்கள் ஆகும்.

இத் திருக்கோயில்களில் சில, கடற்கரையின் மிக அருகிலேயே அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இன்னும் சில, நகரின் உட்புறத்தே அமைந்திருப்பினும் அவைகளையும் 'தென் கீழ்க் கடற்கரைத் திருத்தலங்கள்' எனல் பொருத்தமுடையதே. இத்தென் கீழ்க்கடற்கரைத் தேவாரத் திருத்தலங்கள் ஏழின் வரலாறும் வழிபாட்டு முறையும் வியக்கத்தக்கன. பண்பாடும், கண்டோர்கள் போற்றும் கலைச் சிறப்பும் எண்ணத்தக்கன. ஏற்றமிகு இசைக்கருவிகள், இசையோடு கூடிய தேவாரப்பாடல்கள் கேட்போரைப் பக்தியில் ஆட்படுத்தும் திறம் கொண்டவை. இத்திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள இறைவனின் திருவிளையாடல்களை, புராணச்செய்திகளை அறிதொறும், அறிதொறும் 'பக்தி நனிசொட்டும்' என்பதில் ஐயமில்லை.

'இத்தென்கீழ்க் கடற்கரைத் தேவாரத் திருப்பதிகள்' அனைத்தும் திருத்துறைப்பூண்டியை மையமாக வைத்தே அமைந்திருப்பதால் திருத்துறைப்பூண்டியில் இருந்து பேருந்துகளில் அனைத்து ஊர்களுக்கும் செல்ல வசதி இருக்கிறது. எனவே, திருத்துறைப்பூண்டியிலிருந்து பயணத்தைத்துவங்கி வடக்கிலிருந்து தெற்காக ஒவ்வொரு தலமாக வழிபட்டுச் செல்வது முறையாகவும், மிக எளிதாகவும் அமையும். இத்திருக்கோயில்கள் ஏழு சமய குரவர்களுள் ஒருவரான திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகங்களைப் பெற்றுள்ளது. திருஞானசம்பந்தரின் காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு என்பர் வரலாற்று அறிஞர். எனவே, இத்திருக்கோயில்கள் அனைத்தும் 1300 ஆண்டுகட்கு முற்பட்ட பழமையுடையது என்பது ஈண்டுக் கருதத்தக்கது.

இனித்திருக்கோயில்களைக் கண்குளிரக் கண்டு, முறையாக வழிபட்டு அவன் அருள்பெற விழைவோம்.

---

# 1. திருத்தங்கூர் அருள்மிகு வெள்ளிமலைநாதர் திருக்கோயில்

திருக்கோயில்கள் மனித நாகரிகத்தின் பண்பாட்டின் அடையாளச் சின்னங்களாக விளங்கி வருகின்றன. இவை கலைகளின் வாழிடமாகவும், பண்டைய தமிழரின் கலை மாட்சியை எடுத்துரைக்கும் கலைக் கூடங்களாகவும் அமைந்து வந்திருக்கின்றன. திருக்கோயில்கள் அனைத்தும் வரலாற்றை உட்கிடையாகக் கொண்டிருக்கின்றன. திருக்கோயில்க்ளின் அமைப்பு முறைகள் காலந்தோறும் மாற்றம் பெற்றே வந்திருக்கின்றன. திருக்கோயிலினுள் அமைந்துள்ள திருவுருவங்களும் பல்வேறு வடிவ அமைப்புகளைக் கொண்டவையாக விளங்கி வந்துள்ளன. இத்திருக் கோயில்கள் அந்தந்தக் கால மன்னர்களின் மரபையும், சிற்பங்கள், படைப்பாளர்களின் திறமையையும், உழைப்பையும் முயற்சியையும் தனித்துவப் படுத்திக் காட்டுகின்றன. திருத்தங்கூர் அருள்மிகு வெள்ளி மலை நாதர் திருக்கோயில் இந்த வகையில் தனித்துவத்துடன் விளங்குகிறது.

**திருக்கோயிலின் அமைப்பும், சிறப்பும் :**

" புரைசெய் வல்வினை தீர்க்கும்புண் ணியர்
விண்ணவர் போற்றக்
கரைசெய் மால் கடனஞ் சையுண்டவர் கருதலர்
புரங்கள்
இரைசெய் தாழ லூட்டி யுழல் பவரிடுபலிக்
கெழில் சேர்
விரைசெய் பூம்பொழிற் றெங்கூர் வெள்ளியங்
குன்றமர்ந்தோரே "

எனத் திருஞானசம்பந்தர் இவ்விறைவனைப் போற்றிப் பாடியுள்ளார். இத்திருக்கோயிலானது திருத்துறைப் பூண்டி–திருவாரூர் புகைவண்டி வழியில் 'திருநெல்லிக் காவல்' எனும் புகைவண்டி நிலைய நிறுத்தத்திலிருந்து மேற்காக ஒரு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்திருக் கும் அற்புதமான தலமாகும்.

இத்திருக்கோயில் பொழில் சூழ்ந்து காணப்படுகிறது. இதனை ஞானசம்பந்தர் தனது பதிகத்தில் நறுமணம் வீசும் பொழில், அழகு வாய்ந்த பொழில், வண்டு மலர் ஊது பொழில், தாழ்ந்த பொழில் எனப் பலவாறு எடுத்துரைக்கிறார்.

**திருக்கோயில் வரலாறு :**

இக்திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சில ஆண்டுகளுக்கு முன் இது புதுப்பிக்கப் பெற்றதினால் புதுமைக் கோலத்துடன் எழில் மிக்கதாய்க் காட்சியளிக் கிறது. இத்திருக்கோயிலுக்கு இராசகோபுரம் கிடையாது. ஆனாலும், திருக்கோயிலின் அழகான வளைவு நம்மை வரவேற்கிறது. மூலவர் கோபுரம் சிறியதாக அமைந் துள்ளது. இது பிற்கால அமைப்பினை எடுத்துரைக்கிறது.

திருஞான சம்பந்தரின் தேவாரப் பதிகம் பெற்றிருப்ப தால் இத்திருக்கோயில் மிகப் பழமையானதாக இருந்து காலக் கழிவால் சிதைந்து இருக்கவேண்டும். இத்திருக் கோயில் ஏறக்குறைய 120 வருடங்களுக்கு முன் கண்டனூர் பெ. அ. லா. வீரப்ப செட்டியார் என்பவரால் சிறிய விமானத்துடன் எழிலுற கட்டப்பெற்றுள்ளமை யைத் தல வரலாறு வழி அறியமுடிகிறது

இத்திருக்கோயில் புதிதாக கட்டப்பெற்ற காலத்தில் பழைய கல்வெட்டுகள் அகற்றப் பெற்றிருக்க வேண்டும்.

எனவே, இத்திருக்கோயிலின் வரலாற்றை முழுமையாக, தெளிவாக அறிவதற்குத் தக்க சான்றுகள் எதுவுமில்லை. ஆனாலும், இத்திருக்கோயிலின் அமைப்புகள் பலவும் பிற்காலச் சோழர்களது கலைப்பாங்கையே சுட்டுவனவாக அமைந்துள்ளன.

சோழநாட்டுத் தென்கரையிலுள்ள பற்பலத் தலங்களில் திருக்காரவாயில், வலிவலம், திருக்கைச்சினம், திருநெல்லிக்கா, திருக்கொள்ளிக்காடு, கோட்டூர், திருநாட்டியத்தான்குடி ஆகிய சிவத்தலங்களுக்கு நடு நாயகமாய் இத்தலம் அமைந்திருப்பது சிறப்புக்குச் சிறப்புச் சேர்க்கிறது.

**புராண வரலாறு :**

திருத்தங்கூர் என வழங்கும் இவ்வூரின் பெயர்க் காரணத்தை அறிவதற்குப் புராணச் செய்தி ஒன்று துணைபுரிகிறது.

உலகமானது, பலயுகங்களின் முடிவில் உண்டாகும் அழிவுக்காலத்தில் கடலானது பொங்கியெழ அதில் மாய்ந்து ஒழியும். இப்படி எழுந்த முடிவுக் காலத்தில் இத்திருக்கோயிலில் எழுந்திருக்கும் உமாதேவியார் சிவபெருமானை நோக்கி உமது திருவிளையாடலால் இவ்வுலகம் அழிவு கொள்ளப்படாமல் காத்தருள வேண்டும் என வேண்டினாள். சிவபெருமானும் மனமிரங்கி இத்திருக்கோயிலின் பெருமையை உலகம் அறியும்படிச் செய்தருள வேண்டும் என மனத்துள் எண்ணி வெள்ள நீர்க் கொள்ளாமல் காத்தருளினார். இதையறிந்த சித்தர்களும், ஞானிகளும், பக்தர்களும், தேவர்களும் அடைக்கலமாக இத்திருக்கோயிலை வந்தடைந்தனர். இத்திருக்கோயிலைத் தவிர, உலகம் எல்லாம் மூழ்கி அழிந்தது. இதைப் பிரம்மனும், மகாவிஷ்ணுவும் கண்டு

வியந்து அம்மையையும் இறைவனையும் துதித்து அருள் பெற்றனர்.

உலகம் முழுதும் கடல் நீரால் கொள்ளப் பட்டும், இத்திருக்கோயிலில் மட்டும் தெளிந்த நீர் தேங்கி நின்றதால் இது 'திருத்தேங்கூர்' எனவும் காரணப் பெயர் பெற்றது எனத் தலவரலாறு விளக்கமளிக்கிறது.

**திருக்கோயிலமைப்பு :**

இத்திருவிளையாடல்கள் புரிந்த இறைவனை நினைந்து அவனைக்காணும் ஆவலோடு இத்திருக்கோயிலுக்குள் நுழைந்தால், உள்ளே ஒரு திருச்சுற்று அமைந்திருக்கிறது. வலதுபக்கம் பெரிய நாயகி அம்மன் தனிச் சன்னிதியாக அமைந்திருக்கிறது. இவ்வம்மன் சிறந்தச் சிற்ப அமைப்புடன் வடிவமைக்கப் பட்டுள்ளது. உள்ளத்தைக் கவரும் வண்ணம் அருள் கூர்ந்த நோக்குடன் அமைந்திருக்கும் அம்மனை வணங்கி உட்சென்றால் திருச்சுற்றுடன் கூடிய மூலவர் சன்னதியை அடையலாம்.

இத்திருச்சுற்றின் தெற்குப்பத்தியில் நாயன்மார்கள் ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரின் திருவுருவம் அழகுறக் காட்சியளிக்கின்றன. இதனைஅடுத்து, இறைவன் திருவிழாக்காலங்களில் வீதியுலாவரும்' வாகனங்கள் உள்ளன. மேற்குப்பத்தியில் ஸ்ரீலோகசுந்தரும், விக்னேஸ்வரரும், ஸ்தலகணபதியும் உள்ளனர். ஸ்தல கணபதியின் திருவுருவம் தலை இல்லாமல் அமைந்திருக்கிறது. இத்தல கணபதி பற்றிச் செவிவழிச் செய்தி ஒன்று கூறப்படுகிறது. ஒரு காலத்தில் இத்திருக்கோயிலில் திருடர்கள் கொள்ளையடித்துச் சென்றதாகவும், அதை இவ்விநாயகர் காட்டிக் கொடுத்த தாகவும், அதனை யறிந்த திருடர்கள் இக்கணபதியின்

தலையைக் கிள்ளி எடுத்து விட்டனர் என்றும் கூறப்படுகிறது. இச்செய்தி மக்களின் தெய்வ நம்பிக்கையாக இருந்தாலும் காலக்கழிவால் இத்திருவுருவம் சிதையுண்டு இருக்கலாம் என நாம் உணர முடிகிறது.

மேற்குப் பத்தியின் இறுதியில் சுப்பிரமணியர் வள்ளி தெய்வானையுடன் காட்சி தரும் சன்னதி அமைந்துள்ளது.

வடக்குப் பத்தியில் நவக்கிரகங்கள் ஒன்பதும் சிவலிங்க வடிவில் அமைந்திருக்கின்றன. இத்திருக்கோயிலில் மட்டும் தான் இக்காட்சி அமைந்திருக்கிறது. இது போன்ற அமைப்பு வேறு எங்கும் இல்லை என்பது குறிக்கத்தக்கது. சுக்கிரனும் மற்ற எட்டுக் கோள்களும் இத்திருக்கோயிலில் ஒன்பது சிவலிங்கங்களை வைத்து வழிபட்டதாகவும் அந்த ஒன்பது கோள்களும் வழிபட்ட சிவலிங்கங்களே இன்று நவக்கிரகங்கள் என்ற பெயரால் வழிபடப்படுவதாகவும் திருக்கோயில் தேசிகர் குறிப்பிடுகிறார். ஒன்பதுகோள்கள் வழிபட்ட ஒன்பது சிவலிங்கங்களை நாமும் வழிபட்டு மேலே சென்றால் நவக்கிரகங்களின் அருகிலேயே திருக்கோயிலின் திருமேனித் திருவுருவங்கள் வழிபாட்டுக்கென அமைக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இதில் திருஞான சம்பந்தர் வெண்கலத் திருமேனி ஒன்றுள்ளது. இத்திருவுருவம் ஒற்றைக் காலைத்தூக்கி கொண்டு, இடது கையை நீட்டிக்கொண்டு, வலது கையை மடக்கி நிற்கும் அமைப்பு மிக நேர்த்தியாக வடிக்கப்பட்டுள்ளது.

இத்திருக்கோயிலின் மூலவர் கோஷ்டங்களில் தெற்கே தெட்சிணாமூர்த்தியும், நான்கு கைகளுடன் நின்ற திருக்கோலமாகக் காட்சித்தரும் நர்த்தனகணபதியும் உள்ளனர். மேற்கே அண்ணாமலைத் திருவுருவமும்

வடக்கே பிரமன், துர்க்கை திருவுருவங்களும் எழிலுற அமைக்கப்பட்டுள்ளன. இவற்றை வழிபட்டு வந்தால் மூலவர் சன்னதியை அடையலாம்.

இம்மூலவரின் பெயர் அருள்மிகு வெள்ளிமலைநாதர், வெள்ளி மலை நாதர் எனும் பெயர் ஏற்பட்ட காரணத்தைப் புராணச் செய்தி ஒன்று விளக்குகிறது.

இலக்குமிதேவி ஒரு சமயம் தனது கடைக் கண் பார்வை பட்டவுடனே எத்தகையோர்க்கும் செல்வம் பெருகும்படியான வரத்தைப் பெறவேண்டி இத்திருக் கோயில் இறைவனைப் பணிந்து வழிபட்டு வந்தாள்.

திருக்கோயிலில் கைலாய கிரியிலுள்ள ஆயிரத் தெட்டுக் கொடுமுடிகளில் ஒன்றைக் கொண்டு வந்து நிறுவிச் சிவவழிபாடு வேண்டி விரும்பினாள். அதன் படியே கருடன் மூலம் சிவபெருமானிடமிருந்து கொடு முடியைப் பெற்று வரச்செய்து இத்திருக்கோயில் இறைவனை வழிபட்டாள்.

இத்திருக்கோயிலில் சிவபெருமான் உமாதேவியுடன் கைலாயத்திலுள்ளபடி காட்சி தந்து, இலக்குமி வேண்டிய வரங்களைத் தந்தருளினார். 'இன்னும் வரங்களைக் கேட்கக் கடவாய்' என்றார் இலக்குமி தேவியும் இத்திருக்கோயில் வெள்ளிமலையாகவும், உமாதேவியுடன் சிவபெருமான் எக்காலமும் இருந்து, வேண்டும் வரம் கொடுத்தருளும் படியும் வேண்டினாள். சிவபெருமானும் அப்படியே அருள் செய்தார். அது முதல் இவ்விறைவனின் பெயர் 'வெள்ளி மலை நாதர்' என வழங்கலாயிற்று.

இம் மூலவரைக் கருடாழ்வார் கொண்டு வந்து வைத்து, வழிபாடு செய்து அருள் பெற்றதாகத் தல வரலாறு கூறுகிறது.

இப்பெருமானை, மாசிப் பௌர்ணமியோடு கூடிய திருவாதிரைத் திருநாளில் இத்திருக்கோயிலுள்ள சிவ கங்கையில் நீராடி வழிபட்டால் மிகச் சிறந்த பலன் கிடைக்கும் எனக் கூறுகின்றனர்.

**வழிபாடும், பயனும் :**

இத்திருக்கோயிலில் வழிபாடு நிகழும் முறையினையும், வழிபடுதலின் நோக்கத்தையும் காணலாம். பொதுவாக, வழிபடுதல் என்பது சமயங்களுக்குள் வெவ்வேறு முறையினைக் கொண்டதாக உள்ளது. ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் கூட வழிபாட்டு முறை மாற்றம் பெற்றிருக்கின்றன. இந்து மதத்தில் இன்றியமையாதது திருமேனி (விக்கிரக) வழிபாடு. இங்கு இத்திருமேனி வழிபாட்டு முறை சிறந்ததாகப் போற்றப் படுகின்றன. இதன் நோக்கமாவது,

ஓடும் மனத்தை ஒடுக்குவதற்குரிய உபாயமாக அமைந்திருப்பது. மற்றும் விக்கிரங்களின் அங்கங்கள், ஆயுதங்கள், வாகனங்கள், வரலாறுகள் முதலியவற்றால் இறைவனுடைய அருட் குணங்களை உணர்ந்து அவற்றை வழிபடுவதால் அறிவையும் அன்பையும் ஒழுக்கத்தையும் பண்படுத்தி வளர்ப்பது.

அல்லும், பகலும் இடையறாது ஆன்ம சன்னிதியைச் சுற்றுப் புறங்களில் பரப்புவது.

குடமுழுக்கு, பிரதிஷ்டை முதலிய செயல்களால் விக்கிரகத்தோடு இணைக்கப்பட்டிருக்கும் மூர்த்தியின் அருளை ஆராதனைகளின் மூலம் நிலவுலகத்திற்குப் பொலியச் செய்வது எனப் பலவாக்க் கூறுவர். எனவே, விக்கிரக வழிபாடு திருக்கோயில்களில் முதன்மையாக எண்ணப்பட்டு நடைபெற்று வந்திருக்கின்றன.

இறைவனை வழிபடுதலே தமது பிறவியின் பயனாகக் கருதினர் சமயச் சான்றோர்.

"மானிடப் பிறவிதானும் வகுத்தது மனம் வாக்(கு)
காயம்
ஆனிடத்தைந்து மாடும் அரன்பணிக்காக அன்றே"

எனச் சிவஞான சித்தியார் எடுத்துரைக்கும்.

"வாழ்த்தவாயும் நினைக்க மட நெஞ்சம்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
விழ்த்தவா வினையேன் நெடுங்காலமே"
(தேவாரம்-204/7)

என அப்பர் பெருமான் தாம் வழிபடத் தவறியதை எண்ணி மனமுருகிப் பாடும் இப்பாடலின் வழி வழிபடுதலின் இன்றியமையாத தன்மை நன்கு வெளிப் படுகிறது. எனவே, திருக்கோயில் வழிபாடு என்பது அடியார்களைப் பிறவிப் பிணியிலிருந்தும், உலக துன்பங்களிலிருந்தும் காப்பாற்றும் 'ஆன்மீக நெறி' எனக் கொள்ளல் பொருந்தும்.

இத்திருக்கோயில் இறைவனுக்கு ஐந்து கால வழிபாடுகள் நாள்தோறும் நிகழுகின்றன. அவை, கால வேளை, உச்சி வேளை, மாலை, இரண்டாம் காலம், அர்த்த யாமம் எனும்படி நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்றன. நாள்தோறும் திருமுறைப்பாராயணமும் இறைவனுக்குச் செய்யப்பட்டு வருகின்றன.

இந்நாள் வழிபாட்டைத் தவிர ஆண்டு முழுவதும் சிறப்பு வழிபாடுகளும் நடைபெற்று வருகின்றன. அவை பதினைந்து நாளுக்கு ஒரு முறை நிகழும் பிரதோஷ வழிபாடு. இது நந்தி தேவருக்கு நடத்தப்பெறுவது.

மாதந்தோறும் நிகழுகிறது. கார்த்திகை வழிபாடு. இந்நாளில் சுப்பிரமணியப் பெருமானுக்கு அபிடேகமும், தீப ஆராதனைகளும் சிறப்பாக நடத்தப்பெறுகிறது. வாரம் தோறும் வெள்ளிக்கிழமை வார வழிபாடும் நடத்தப்பெற்று வருகிறது. இவ்வார வழிபாடுகள் மட்டுமின்றி மாதந்தோறும் வரும் சிறப்பு நாட்களில் நிகழும் வழிபாடுகளாவன; ஆவணி மாதத்தில் நிகழும் விநாயகர் சதுர்த்தியும், புரட்டாசி மாதத்தில் நிகழும் நவராத்திரி விழாவுமாகும். இந்நவராத்திரி வழிபாட்டு நாளில்பெரியநாயகி அம்மனுக்கு அபிடேக ஆராதனைகள் சிறப்பாக நடைபெறுகின்றன. மேலும் விஜயதசமி அன்று மூலவரின் திருவீதி உலா நிகழுகின்றது. ஐப்பசி மாதத்தில் நிகழும் தீபாவளி அன்றும் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்பெறுகின்றன.

கார்த்திகை சோம வாரத்தில் இறைவனுக்கு அபிடேக ஆராதனைகளும் வழிபாடுகளும் முறையாகச் செய்யப் படுகின்றன. திருக்கார்த்திகை அன்று தீபம் ஏற்றுதல், சொக்கப்பானைக் கொளுத்துதல் முதலியவையும் நடைபெறுகின்றன. மார்கழி திருவாதிரை அன்றும் தைமாதத்தில் வெள்ளிதோறும் மற்றும் மாசி மகத்தின் போதும் இறைவன் திருவீதியுலா புறப்பாடும் வழிபாடு களும் நடைபெறுகின்றன.

**விழாக்கள் :**

இத்திருக்கோயிலின் நிதிநிலை குறைவாக இருக்கும் காரணத்தால் பெரும் திருவிழாக்கள் எதுவும் நடத்தப் பெறுவதில்லை இருவிழாக்கள் மட்டும் சிறப்பு விழாக் களாகச் சிறிய அளவில் நடத்தப் பெற்று வருகின்றன. பங்குனி மாதத்தில் ஐந்தாம் நாள் முதல் பன்னிரண்டாம் நாள வரை சூரிய வழிபாடு செய்யப்படுகிறது. இந்த ஏழு நாட்களிலும் இறைவனுக்கு அபிடேக ஆராதனைகள்

வழிபாடுகள் முதலியவை நடைபெற்று வருகின்றன. இந்த விழாவின் நோக்கம், இறைவன் மீது ஏழு நாட்களிலும் சூரியனுடைய ஒளிக்கதிர்கள் நேரடியாக விழுவதால் இத்திருவிழா கொண்டாடப்படுகிறது.

வைகாசி விசாகத் திருநாளில் ஒரு நாள் சிறப்பு விழாவாக நடைபெறுகிறது இதில் முதல் நாள் விக்னேஸ்வரர் பூஜையும் மறுநாள் கங்கை தீர்த்தமும், ரிஷப வாகனமும் நடைபெறுகிறது. இறைவனுக்கு உகந்த நாள் என்பதால் இவ்வழிபாடு சிறப்பாக நடத்தப் பெறுகிறது. மூலவர் வெள்ளிமலைநாதரைத் திருஞான சம்பந்தர்,

''பண்டு நான் செய்த வினைகள் பறையவோர் நெறி
யருள் பயப்பார்.
கொண்டல்வான் மதி சூடிக்குறைகடல் விடமணி கண்டர்
வண்டு மாமலரூதி மதுவுண விதழ் மறிவெய்தி
விண்டவர் பொழிற் றெங்கூர் வெள்ளியங்
குன்றமர்ந்தோரே'

இவ்வாறு போற்றிப் புகழ்கிறார். இவர் இத்திருக்கோயில் இறைவன்மேல் பதினொரு பாடல் கொண்ட ஒரு பதிகம் பாடியுள்ளார். இப்பதிகப் பாடல்களில் இறைவனைப் பலபடப் பாராட்டுகிறார். விண்ணவர் போற்ற நஞ்சையுண்ட பெருமான் என்றும், சடைமுடி மேல் பாம்பினோடு பிறையையும் சூடியிருக்கும் இறைவன் என்றும், மனிதர்கள் அடையும் வல்வினைகள் அகல அருள்பவன் என்றும், மழுவாளை ஆயுதமாகவும், புலித் தோலை ஆடையாகவும் கொன்றைப் பூவை மாலையாகவும் சூடியிருப்பவன் என்றும், காலனைக் காலால் உதைத்தவன் என்றும், திருமாலும் அயனும் தேடி காண முடியாத அடிமுடியினை உடையவன் என்றும், இத்திருக்கோயில் இறைவன் பெருமைகளைப் பாடல் தோறும் எடுத்துறைக்கிறார்.

இத்திருக்கோயில் பெருமானை, நாமும் அப்பாடல்களைப்பாடி வழிபட்டு, வெளிப்புறம் வந்தால் திருக்கோயிலின் இருபக்கமும் சூழ்ந்திருக்கும் தென்னந் தோப்புகள் அளப்பரிய காட்சியாக அமைந்திருப்பதைக் காணலாம். இத்திருக்கோயிலின் தலவிருட்சம் தென்னை ஆகும்.

இத்திருக்கோயிலின் வடபக்கம் திருக்குளம் ஒன்று உள்ளது இது சிவதீர்த்தம் என்று வழங்கப்பெற்று வருகிறது இத்தீர்த்தத்தில் அகலிகை தன் பாவம் கெடும் படியாக வந்து மூழ்கிச் சிவனருள் பெற்றதாகவும், கௌதமரின் பாவம் நீங்கப்பெற்றதாகவும், பீஷ்மர் துரோணர், பாண்டவர்கள் முதலியோர் பாவம் நீங்கிப் பெருவாழ்வு பெற்றதாகவும், அரிக்தமன் எனும் அரசனும். கங்கா தேவியும் வழிபட்டு அருள்பெற்றதாகவும், அறிந்தவுடன் நாமும் அவனருள்பெறத் தீர்த்தம் பெற்று வழிபட்ட ஆற்றல் ஏற்படுகிறது.

**நிர்வாகம் :**

இத்திருக்கோயில் தமிழக அறநிலைய ஆட்சித் துறையின் கீழ் இருந்து வருகிறது. அறநிலையத்துறையினரால் நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரி நிர்வாகத்தைக் கவனித்து வருகிறார்.

இத்திருக்கோயிலுக்கு 98 ஏக்கர் நன்செய் நிலமும், 9 ஏக்கர் புன்செய் நிலமும் உள்ளது. இதனைத் தவிர கட்டிடங்கள் பன்னிரண்டும், மனைப்பகுதி 217-ம் சொந்தமானதாக இருக்கின்றன.

இத்திருக்கோயிலில் தங்கம், வெள்ளி போன்ற வற்றாலான அணிகலன்கள் நிறைந்துள்ளன. அவற்றில் தங்கத்தின் மதிப்பு, ரூ. 1720/- வெள்ளியிலான அணிகலன்களின் மதிப்பு, ரூ. 8572,70/- மரவாகனங்களும் நிறைந்து உள்ளன. இவைகளின் மொத்த மதிப்பு 19,192/- ஆகும்.

இத்திருக்கோயிலுக்குப் பல இனங்களிலிருந்தும் வருமானம் கிடைத்து வருகிறது. தென்னை, கட்டிடம், மனைவாடகை, பாசிக்குத்தகை, புளி, பலா, மரவிற்பனை பல வகைகளிலிருந்தும் கிடைக்கும் மொத்த வருமானம் ஆண்டுக்கு, ரூ. 24,634/-ஆகும்.

**அறக் கட்டளை:**

இத்திருக்கோயிலில் மூன்று அறக்கட்டளைகள் அமைந்திருக்கின்றன. உச்சிகாலக்கட்டளை, அர்த்த ஜாமக்கட்டளை, சுக்கிரவாரக் கட்டளை என்பவை அவை. இவைமூலம் பல்வேறு வழிபாடுகள் நடத்தப் பெறுகின்றன. இவை எண்ணிறைந்த சமயப் பணி, களையும் ஆற்றி வருகின்றன.

**திருப்பணி:**

பெ. அ. லா. வீரப்ப செட்டியார் அவர்களால் திருக்கோயில் முழுமையும் புதுப்பிக்கப்பெற்று, 30-4-1986 அன்று திருக்குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது. இவர் திருக்கோயில் நிர்வாகத்தில் தம் பங்கினைச் சிறப்பாகச் செய்து வருகிறார்.

இத்திருக்கோயில் இறைவனின் பெருமைகளையும், இத்தலத்தின் இயற்கை நலத்தையும் அறிந்த மகிழ்வோடு அடுத்தத் தலத்திற்குப் புறப்படுகிறோம்:

திருத்தெங்கூர் இறைவனை வழிபட்டு மீண்டும் திருத்துறைப்பூண்டி - திருவாரூர் பேருந்து சாலையை அடைந்து, தெற்காக ஒரு கி. மீ. தொலைவு வந்தால் 'தென்கீழ்க் கடற்கரைத் தேவாரத் திருத்தலத்தில் இரண்டாவது தலமாகிய கச்சனம் அருள்மிகு கைச்சின் னேஸ்வரர் திருத்தலத்தை அடையலாம்.

---

# 2. கச்சனம் அருள்மிகு கைச்சின்னேசுவரர் திருக்கோயில்

இத்திருக்கோயில் காவிரித் தென்கரைத் தலங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இது திருத்துறைப்பூண்டி - திருவாரூர் புகைவண்டிப் பாதையில் 'அம்மலூர்' எனும் புகை வண்டி நிலைய நிறுத்தத்திலிருந்து ஒன்றரை கி. மீ. தொலைவிலும், திருத்துறைப்பூண்டி - திருவாருர் பேருந்து வழியில் திருத்துறைப்பூண்டியிலிருந்து 12 கி.மீ. தொலை விலும் அமைந்திருக்கிறது.

**தீர்த்தம் :**

திருக்கோயிலைச் சுற்றிலும் உயர்ந்த மதில்கள் அழகாக கம்பீரமாக அமைந்திருக்கின்றன. தெற்குப் புறம் மதிலுக்கு வெளியே மிகப்பெரிய குளம் ஒன்று அழகிய படிக்கட்டுகளுடன் காட்சியளிக்கிறது.

இதுவே 'அகத்திய தீர்த்தம்' என வழங்கப்படுகிறது. இது பற்றிப் புராணச்செய்தி ஒன்று கூறப்படுகிறது. 'மலைகளுக்கு அரசனான இமவானது மகள் பார்வதி யானவள் சிவபெருமானை மணம் புரிய எண்ணித்தவம் செய்தாள். திருமணம் கைகூடியது. திருமணம் நடை பெறும் காலத்தில் தேவர்களும், முனிவர்களும் மற்றை யோரும் இமயமலையில் ஒருங்கே கூடினர். எல்லோரும் ஒன்று சேரவே, வடபுறம் தாழ்ந்தது. தென்புறம் உயர்ந்தது. இறைவன் அகத்திய முனிவரைத் தென்திசை செல்லும் படியாகவும், 'திருமறைக்காட்டில்' தன் திருமணக்கோலம் காட்டுவதாகவும் அருள் செய்தார். அகத்திய முனிவரும் தெற்கே வந்திருந்து விந்திய மலையை அடக்கினார். தன்னைச் சூழ்ச்சியால் கொல்ல

நினைத்த இல்வலன், வாதாபி என்ற அசுரர்களைக் கொன்றார். இதனால் இவருக்குக் கொலைப்பாவம் தொடர்ந்தது.

அகத்திய முனிவர் கவலை கொண்டு சோங்கு வனமாகிய இத்திருக்கோயிலுக்கு வந்து கமண்டல நீரால் ஒரு தீர்த்தம் உண்டாக்கி அதில் மூழ்கி எழுந்து இறைவனை வழிபட்டார். இதனால் தனது கொலைப் பாவம் நீங்கப்பெற்றார். பிறகு திருமறைக்காடு சென்று சிவபெருமானுடைய திருமணக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தார். அகத்தியர் வழிபட்ட சிவலிங்கம் 'அகத்திய லிங்கம்' என்றும், அவர் உண்டாக்கிய தீர்த்தம் 'அகத்திய தீர்த்தம்' என்றும் இன்றும் வழங்கி வருகின்றன.

**திருக்கோயிலமைப்பு :**

இத்திருக்கோயில் திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகம் பெற்றது என்பதை நாம் திருக்கோயிலுக்குள் நுழையும் முன்னே அங்கு பாடப்பெறும் பாடல் ஓசையால் அறிய முடிகிறது.

"தையலோர் கூறுடையான் றண்மதிசேர்
செஞ்சடையான்
மையுலா மணிமிடற்றான் மறைவிளங்கு பாடலான்
நெய்யுலா மூவிலை வேலேந்தி நிவந்தொளிசேர்
கையுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே"

எனும் தேவாரப்பாடலை 'ஓதுவார்' பாட அது நம் செவிகளில் தேனென இனிக்கிறது. நாமும் அப்பாடலை இசைத்தபடியே கோயிலினுள் நுழைகிறோம். இத்திருக் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இத்திருக் கோயிலினுடைய ராஜகோபுரம் மூன்று நிலைகளைக் கொண்டது. இவை ஒவ்வொரு திருக்கோயிலிலும் ஒற்றைப்படைகளிலே அமைந்திருக்கும். இவை 3, 5, 7, 9

என அமைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொன்றும் ஒரு தத்துவத்தை விளக்கும். மூன்று வாயில் அமைந்திருப்பதை 'ஜாக்கிரத்ஸ்வப்ன ஸுஷுப்தி' எனக் கூறுவர். ஆனால் கட்டிடக்கலை நிபுணர்கள் இதனைத் 'திரிதளம்' என அழைப்பர். கோபுரத்திற்குத் 'தூலலிங்கம்' என்று பெயர். தொலைவிலிருந்து இதனைக்கண்டு தெய்வ வடிவமாக எண்ணி வணங்குவது முறை. கோபுரத்தைக் காணும்பொழுதெல்லாம் மக்களுக்கு தெய்வ நினைவு உண்டாகும் என்ற நோக்கத்துடன் இதனை அமைத்து உள்ளனர் இதனை 'ராசகோபுரம்' எனவும் அழைப்பர். மூன்று தளமுண்டய கோயிலுக்கு நனவு, கனவு, சுழுத்தி என்ற மூன்று அவஸ்தைகளையும் ஒப்பிடுவர்.

இத்திருக்கோயிலின் ராசகோபுரத்தைக் கடந்து உட்சென்றால் பலிபீடமும், நந்தியும், கொடி மரமும் இடம் பெற்றுள்ளது. பலிபீடம் அமைப்பதன் காரணம், அதன் அருகில் சென்று வணங்குவோர் மனத்தில் உள்ள கீழான இயல்புகளையெல்லாம் பலி கொடுத்துவிட்டு மேலான இயல்புகளுடன் திருக்கோயிலுக்குள் செல்ல வேண்டும் என்பதே. இப்பலிபீடத்தை அந்தராத்துமா எனவும் கூறுவர். அதாவது கோபுரம் பூதாத்துமா என்றும், பலிபீடம் அந்தராத்துமா என்றும், துவஜஸ்தம்பம் - தத்துவாத்துமா என்றும், லிங்கம் ஜீவாத்துமா என்றும், குரு மந்திராத்துமா என்றும், பிரும்மரந்திரம் - பரமாத்துமா என்றும் கூறுவர். நந்தி, பலிபீடம் இவைகளை முறையாக வணங்கித் திருக்கோயிலுக்குள் நுழைகிறோம்.

**மாடக்கோயில் :**

இத்திருக்கோயில் 'மாடக் கோயில்' வகையைச் சார்ந்ததாக உள்ளது. மாடக் கோயில் என்பது மாடி போல் அமைந்த திருக்கோயில் என்பது பொருள் எனவும்,

உயரமான பீடத்தின் மேலிருப்பதால் மாடக் கோயில் எனப் பெயர் பெற்றுள்ளது எனவும் மயிலை, சீனி. வேங்கடசாமி தனது 'தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்' என்னும் நூலில் குறிப்பிடுகிறார். இவற்றைவிட 'கருவறை' கீழ்தலத்தில் இல்லாமல் மேல்தலத்தில் இருக்கும் கோயில்களுக்கு, 'மாடக் கோயில்கள்' என்று பெயர் என்னும் இரா. நாகசாமியின் கூற்று பெரிதும் பொருத்த முடையது எனலாம். அதாவது, மாடக் கோயிலென்பது கருவறை சமதளத்தில் இல்லாமல் இரண்டடி உயரத்தில் அமைந்திருக்கும். இத்திருக்கோயில் மாடக்கோயில் வகையைச் சார்ந்துள்ளதால் சோழ மன்னன் கோச்செங்கணான் காலத்தில்தான் கட்டப்பெற்றிருக்க வேண்டும். ஏனெனில்,

> ' எண்டோளீசருக்கு எழில்மாடம் எழுபது செய்துல
> காண்ட கோச்செங்கட் சோழன்''

எனும் நாலாயிரதிவ்விய பிரபந்தப் (6:8/5-6) பாடலானது, கோச்செங்கட் சோழன் எழுபது மாடக் கோயில் எடுப்பித்தமையைச் சுட்டி நிற்பதைக் காணலாம்.

**காலம் :**

கோச்செங்கட்சோழனின் காலம் பல்லவர்க்கு முற்பட்ட காலம் எனத் திடமாகக் கூறலாம். மேலும் இவன் கி.பி. 7 ஆம் நூற்றாண்டினரான அப்பர், சுந்தரர் முதலியோரால் குறிக்கப்படுவதால் அவர்கட்கு முற்பட்டவனாவான். 'இப்பேரரசன் கி.பி.300 - 600க்கும் உட்பட்டவனாக இருக்கவேண்டும். பல சான்றுகளைக் கொண்டு ஆராயின், 'இவன் காலம் கி.பி ஐந்தாம் நூற்றாண்டு' என்பர் டாக்டர் மா. இராசமாணிக்கனார். எனவே இத்திருக்கோயில் ஐந்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட மிகப்பழமையான கோயில் என்பது உறுதி.

மாடக் கோயிலான இத்திருக்கோயிலுக்குள் ஒரே திருச் சுற்றுதான் அமைந்துள்ளது. இத்திருச்சுற்றில் மேற்கே விநாயகர், சீனிவாசப்பெருமாள், விதூரமலிங்கம், காசி விஸ்வநாதசுவாமி, அகத்தியலிங்கம் ஆகிய திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஆறுமுகப்பெருமான் மற்றும் கெஜலட்சுமி அம்மன் கோயில்களும் இதனை ஒட்டியே தனித்தனி மண்டபங்களாக அமைக்கப்பட்டுள்ளன. திருச்சுற்றின் வடக்கில் நடராஜர் சபையும், திருச்சுற்றின் கிழக்கில் சூரியர் பைரவர், கோங்குவனநாதர், சனீசுவரர் விநாயகர், நவக்கிரகம் முதலியனவும், இடைப்பள்ளியும் அமைந்துள்ளன.

கருவறையின் நுழைவாயிலில் விநாயகனும், முருகனும் முறையே இரு பக்கமும் உள்ளனர். இதன் தெற்குப் புறம் திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்ற சமய குரவர்களின் உருவங்கள் காட்சி அளிக்கின்றன. இவற்றினைக் கடந்து உட் சென்றால் மூலவப் பெருமானாகிய 'கைச்சின்னேசுவரர்' இறைவன் சிவலிங்கமாகக் காட்சித் தருகிறார். இச்சிவலிங்கத்தின் மேல் கைச்சின்னம் அமைந்துள்ளது. அவ்வாறு அமையப் பெற்றமைக்குப் புராண வரலாறு ஒன்று கூறப்படுகிறது.

கௌதம முனிவரால் சபிக்கப்பெற்ற இந்திரன் திருவாரூரை அடைந்து வழிபாடு செய்தான். அவ்விறைவன் அவனை, 'கோங்குவனம்' (கச்சனத்திற்கு மறுபெயர்) சென்று வழிபட்டால் குறைகள் தீரும் என்றருளினார். அதன்படி இந்திரன் கோங்குவனம் அடைந்து தன் வச்சிராயுதத்தால் ஒரு தீர்த்தம் உண்டாக்கி அதில் மூழ்கி எழுந்து மண்ணினால் ஒரு சிவலிங்கம் செய்து, ஐந்து மாதம் காலம் வழிபட்டு வந்தான்.

ஆறாவது மாதத்தில் விசாக நட்சத்திரத்துடன் கூடிய முழு பூரண நாளில் வழிபாட்டை முடித்துச் சிவலிங்கத்தைத் திருக்குளத்தில் சேர்ப்பிக்க எண்ணி, சிவலிங்கத்தைக் கைகளினால் பற்றி எடுக்கும் பொழுது, சிவலிங்கம் பூமியில் பற்றிக் கொண்டது. இதனால் இந்திரனுடைய கைவிரல்கள் இச்சிவலிங்கத்தின் மேல் சின்னமாக அமைந்தன. இறைவன் இந்திரனுடைய குறைகளைப் போக்கி அருள் வழங்கினார். இந்திரன் இறைவனிடம் தனக்கு அருளியது போலவே இத் திருக்கோயிலுக்கு வந்து வழிபடும் மற்றையோர்க்கும் அருள் புரிய வேண்டும் என வேண்டி வரம் பெற்று இந்திரவுலகம் அடைந்தான். ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் இவ்விறைவனுக்குத் திருவிழாவும் நடத்தி வந்தான். இதனைப் பின்பற்றியே இன்றும் இத் திருக்கோயிலில் வைகாசி மாதத்தில் திருவிழா நடத்தப்படுகிறது.

இந்திரன் கைவிரல்கள் இச்சிவலிங்கத்தின் மேல் அமைந்ததால் இதற்குக் 'கைச்சின்னேசுவரர்' என்று பெயர் வழங்கப்பட்டது. இவ்விறைவனின் பெயரால் இவ்வூருக்குக் 'கைச்சினம்' என்று பெயர் அமைந்தது. அப்பெயர் காலமாற்றத்தில் திரிந்து 'கச்சனம்' என இன்று வழங்கப்பட்டு வருகிறது. கைச்சின்னம் இன்றும் இச்சிவலிங்கத்தின் மேல் அமைந்திருப்பது குறிக்கத்தக்கது.

இவ்விறைவனைத் திருஞானசம்பந்தர் தம் பதிகத்தில் அவனது பல்திறத்தையும் எடுத்துக்கூறி பாராட்டுகிறார். தேவர்கள் கடைந்தெடுத்த நஞ்சை உண்ட இறைவன், உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவன், செஞ்சடையிலே சந்திரனைச் சூடி இருப்பவன், மறைகள் போற்றுகின்ற இறைவன், செய்ய திருமேனியை உடையவன், பாம்பை நாணாகவும், மலையை வில்லாகவும்

கொண்டு முப்புரங்களை எரித்தவனாகிய இறைவன் இத்திருக்கோயிலிலே பள்ளி கொண்டுள்ளான் என்கிறார். இவ்விறைவனை வழிபடுவோர் விண்ணுலகை ஆள்வர் எனவும் பாராட்டியுரைக்கிறார். இவரது இவ்வூர்ப் பதிகத்தில் பத்துப்பாடல்களே கிடைக்கப் பெற்றிருக்கிறது.

"பாடலான் நான்மறையான் பைங்கொன்றை
பாம்பினொடும்
சூடலான் வெண்மதி யைந்துன்று கரந்தைபாடும்
ஆடலானங்கையிலேந்தி யரட்ரவக்
காடலான் மேவியுறை கோயில் கைச்சின்னமே."

எனத் திருஞானசம்பந்தரது பதிகப்பாடலை நாமும் பாடித்துதித்து மேலே செல்கிறோம்.

இவ்விறைவன் சன்னிதிக்கு மறுபுறம் அம்மன் சன்னிதி உள்ளது. அம்மையின் பெயர் வெள்ளை நாயகி அவர் சன்னிதி சிறப்புற அமைந்துள்ளது. இறைவன் சன்னிதிக்கும், அம்மன் சன்னிதிக்கும் இடையில் தெற்குப் பார்த்த வாயிலையுடைய சன்னிதியில் சண்டிகேசுவரர் அமைக்கப்பட்டுள்ளார்.

கருவறையின் வெளிப்பக்க கோஷ்டங்களில் திருக்கோயிலின் ஆகம முறைப்படி தெற்கே தெட்சிணாமூர்த்தியும், விநாயகரும், மேற்கே அண்ணாமலையாரும் வடக்கே சரசுவதி துர்க்காதேவி, ஜேஷ்டாதேவி, அர்த்தநாரீசுவரர், பிர்ம்மா முதலிய திருவுருவங்களும் உள்ளன. இத்திருக்கோயிலின் வாயிலுக்கு எதிரே முன் மண்டபம் ஒன்று உள்ளது. இது விழாக்காலங்களில் 'தியாகராஜா' எழுந்தருள்வதற்காக அமைக்கப்பட்டுள்ளது.

**வழிபாடு :**

வழிபாடு வாழ்க்கையில் இன்றியமையாதது அது தெய்வத்தை நோக்கி செயல்படுவதாக இருக்கவேண்டும். இறைவனை வழிபடுவதின் பயனாகப்பழிதீர்ச் செல்வங்கள் பற்பல நம்மை வந்துசேரும்.

வழிபாடு என்பது நம்மை நாமே தூய்மை செய்து கொள்ளும் ஆன்மீக நெறியாகும். மனம், மெய், மொழிகளெனும் முக்காரணங்களின் அழுக்கைத் தியானம், துதி, அர்ச்சனை இவை மூலம் போக்க வேண்டும். இதனையே துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பின்வருமாறு விளக்குகிறார்.

" திருக்குறும் அழுக்காறு அவாவோடு வெகுளி
செற்றம் ஆகிய மன அழுக்கைத்
தியானம் என் புனலால் ; பொய்புறங்களும்
தீச்சொல் என்றவாய் அழுக்கை
அருட்கிளர் நினதுதுதி எனும் புனலால்
அவத்தொழில் எனும் மெய் அழுக்கை
அருச்சனை என்னும் புனலால் கழுவா
அசுத்தனேன் உய்யும் நாள் உளதோ "

எனவே, வழிபாடு என்பது நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொள்ளும் ஆன்ம முயற்சி எனலாம். இது புறவழிபாடு, அகவழிபாடு என இருவகைப்படும். புறவழிபாட்டை விட அகவழிபாடே மேலானது. புறவழிபாட்டின் மூலமே அகவழிபாட்டை அடையமுடியும். புறவழிபாடு அபிடேகம், அர்ச்சனை, நைவேத்தியம், தீபாராதனை, சோடச உபசாரம் என்பவை ஆகும்.

இத்திருக்கோயில் இறைவனுக்கு ஐந்து கால வழிபாடுகள் ஆகம முறையில் நடைபெற்று வருகின்றன.

அவை கால வேளை 9-30 மணியளவிலும், உச்சிவேளை 12-00 மணியளவிலும், மாலை நேரம் 6-00 மணியளவிலும், இரண்டாம் காலம் இரவு 8-00 மணியளவிலும், அர்த்தசாமம் இரவு 9-00 மணியளவிலும் வழிபாட்டுக் காலங்களாக நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றன.

நாள்தோறும் திருமுறைப் பாராயணமும், இறைவனுக்குச் செய்யப்பட்டு வருகிறது. பஞ்ச கருவிகளை உணர்த்து முகமாக ஐந்துகிளை தீபமும், இறைவன் சோதி வடிவானவன் என்பதைக் குறிக்கும் வகையில் அலங்கார தீப ஆராதனையும் செய்யப்படுகிறது.

இத்திருக்கோயிலில் இறைவனை வழிபாடு செய்து அருளைப்பெற்றவர்கள் இந்திரன் அகத்தியர், விதூமன் முதலியோர் எனத் தலவரலாறு கூறுகிறது.

ஆனித்திருமஞ்சன நாளிலும், கார்த்திகை மாதம் ஞாயிறு நாட்களிலும் மார்கழி திருவாதிரை, மாசிமகம் பங்குனி உத்தரம் முதலிய சிறப்பு நாட்களிலும் பிரதோஷ காலங்களிலும் மாதாந்திர கார்த்திகையிலும் இறைவனது புறப்பாடுகள் நிகழுகின்றன.

**திருவிழாக்கள் :**

வாழ்க்கைத் தேவைகளால் நிறைவு பெற்ற மக்கள், குறிப்பிட்ட ஒரு நாளிலோ, சில நாட்களிலோ, ஓரிடத்திலோ கூடி நடத்தும் விழாக்களுக்கு 'அறுவடை விழாக்கள்' என்று பெயர். அதுபோல தெய்வ உணர்வால் உந்தப்பெற்ற மக்கள் இறைவனைக் கருதி கொண்டாடப் படுவதே 'திருக்கோயில் விழா'. விழா, விழைந்து செயற்படுவதால், அதனை 'நிகழ்ச்சி விழைவு' எனக் குறிக்கலாம்.

எல்லா சிவாலயங்களிலும் ஆண்டுக்கு ஒரு முறை 'பிரும்மோத்ஸவம்' நடைபெறுகிறது. பிரம்மாவே இதை நடத்தி வைப்பதாகக் கருதப்படுவதால் பிரும்மோத்ஸவம் என்ற பெயர் ஏற்பட்டது.

இத்திருக்கோயிலில் பிரும்மோத்ஸவ வைகாசிப் பெருந்திருவிழா மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. விசாகப்பெருந்திருவிழா நடைபெறும் பத்து நாட்களில் காலையிலும், இரவிலும் பஞ்சமூர்த்திகளின் வீதியுலா புறப்பாடு நிகழும். இந்நிகழ்வு, இறைவனே வீதியுலா வந்து மக்களுக்கு காட்சிதரும் அளப்பரிய பெருமை உடையது. இந்திரன் இத்திருக்கோயிலில் அருள் பெற்றதால், அவன் இவ்விறைவனுக்கு வைகாசி மாதத்தில் திருவிழா எடுத்துப் போற்றினான். அவன் செய்து வந்த திருவிழாவே இன்றளவும் வைகாசி மாதத்தில் பெருந்திருவிழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

இவ்விழாக் காலங்களில் மிகவும் உயரிய வேலைப் பாடமைந்த பல்வேறு வாகனங்களில் சுவாமி வீதியுலா புறப்பாடு நிகழும். அன்றைய நாட்களில் தேவார இன்னிசைப் பாடல்களும், சொற்பொழிவுகளும், பல்வேறு கலை நிகழ்ச்சிகளும் நிகழ்த்தப் பெற்று மக்களை மனம் மகிழ்விப்பதோடு, பக்தியையும் வளர்ப்பர். மார்கழி மாதத்தில் திருப்பாவை, திருவெம் பாவை விழாவும் நடத்தப் பெறுகிறது. இந்நாட்களில் 'பாவைப்போட்டி' வைத்து திருக்கோயில் நிர்வாகத் தினரால் பள்ளி மாணவர்களுக்குப் பரிசும் அளிக்கப்பட்டு வருகிறது.

புட்டாசி மாதத்தில் கலைமகள் விழாவும், விஜயதசமி அன்று சுவாமி புறப்பாட்டுடன் அம்பு போடுதலும்,

ஐப்பசி மாதத்தில் கந்தசஷ்டி விழாவும் சிறப்பாக நடந்தேறி வருகிறது..

**நிர்வாகம் :**

இத்திருக்கோயில் நிர்வாகம் மதுரை திருஞான சம்பந்தர் ஆதீன மேற்பார்வையிலும். 1950 முதல் தமிழ்நாடு அறநிலையப் பாதுகாப்புத். துறையின் நிர்வாகத்திலும் செயல்பட்டு வருகிறது அறநிலையத் துறையின் மூலம் நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரி, நிர்வாகத்தை கவனித்து வருகிறார். மதுரை திருஞான சம்பந்தர் ஆதீனத்தின் 291 ஆவது பட்டத்திலுள்ள ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் இத்திருக்கோயிலுக்குப் பரம்பரை அறங்காவலராகச் செயல்பட்டு வருகிறார்.

**சொத்துக்கள் :**

இத்திருக்கோயிலுக்குச் சொந்தமாக 265 ஏக்கர் நன்செய் நிலங்களும், 44 ஏக்கர் புன்செய் நிலங்களும் உள்ளன. மேற்படி நிலங்கள் அனைத்தும் குத்தகைக்கு விடப்பட்டுள்ளன. இந்நிலங்களிலிருந்து ஆண்டுக்கு 1033 குவிண்டால் நெல் கிடைத்து வருகிறது. இத்திருக்கோயிலுக்குச் சொந்தமான அணிகலன்களின் மதிப்பு வெள்ளி ரூ. 16,000-00, தங்கம் ரூ. 698-00, வாகனங்கள் ரூ 9,297-61, மொத்தம் ரூ. 25,995-61. இதனைத் தவிர மதிப்பிடப் பெறாத முப்பது விக்கிரகங்கள் திருக்கோயிலுக்குச் சொந்தமானதாக உள்ளன.

இத்திருக்கோயிலுக்குப் பல்வேறு வகையிலிருந்து, கிடைக்கும் ஆண்டு வருமானம் 1,05,129-56/- ஆகும். இத்திருக்கோயிலில் அலுவலக எழுத்தர் ஒருவரும் உள்துறையில் பதினாறு பணியாளர்களும் பணியாற்றி வருகின்றனர்.

**திருப்பணி :**

இத்திருக்கோயில் சீரமைக்கப்பட்டு 12—7—58 ல் திருக்குடமுழுக்கு செய்யப்பட்டுள்ளது. தற்போதும் திருப்பணிகள் செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகின்றனர்.

இத்திருக்கோயில் சமுதாயத்திற்குச் செய்யும் பணியானது, குடிநீர்த் தொட்டி ஒன்று அமைத்து, பொது மக்களுக்குக் குடிநீர் வழங்குகிறது. பொதுவாகத் திருக்கோயில் சமுதாயத்தின் அங்கமாக விளங்குவதால், திருக்கோயில் செய்கின்ற பணியெல்லாம் சமுதாயப் பணியே எனல் பொருத்தமுடையதாகும்.

**கல்வெட்டு தரும் குறிப்புகள்:**

இத்திருக்கோயிலில் பதினோரு கல்வெட்டுகள் கிடைக்கப் பெற்றுள்ளன. இதில் சோழர் காலத்தவை எட்டும், பாண்டியர் காலத்தவை ஒன்றும், விசய நகர மன்னர்கள் காலத்தவை இரண்டும் உள்ளன. இவையாவும் தமிழிலேயே உள்ளன. தமிழ்நாடு தொல் பொருள் ஆய்வுத் துறையினரால் பதிவு செய்யப்பெற்று வெளியிடப் பெற்றுள்ளன. அவைகளுள் இத்திருக் கோயில் கருவறையின் மேற்குப்புற அடிவரிசையில் உள்ள கல்வெட்டொன்று விசய நகரமன்னன் விருப்பண உடையாரின் சக ஆண்டு 1307 (கி.பி.1385) வெளியிடப் பெற்றுள்ளது. இதில் ராஜேந்திர சோழவளநாட்டில் வடக்கால் வண்டலை வேளூர்க் கூற்றத்தின் பகுதியான கச்சனப்பற்றிலுள்ள நிலங்களைச் சதுர்வேதி பட்டர்களுக்கு (வேதமறிந்த பிராமணர்கள்) இறையிலியாகக் (வரியில்லா நிலமாக)கொடுத்தது பற்றிக்குறிப்பிடுகிறது. இதன்மூலம் இவ்வூர் வேளூர்க் கூற்றத்தைச் சேர்ந்த ஒரு பகுதி என அறியமுடிகிறது.

அடுத்துள்ள கல்வெட்டும் அவ்விடத்தில் உள்ளது. இது விசய நகர மன்னன் வீர பூபதி உடையாருடைய காலத்தில் சக ஆண்டு 1342ல் (கி.பி. 1420) வெளியிடப் பெற்றுள்ளது இதன் வழி அறியப்படும் செய்தியாவது; இராசேந்திர சோழ வள நாட்டு வன்புலஞ்சேரிக் கூற்றத்தைச் சேர்ந்த கொங்கு வடிவேலன் என்பவனுக்கு ஒருமனையும், நிலமும் தானமாகக் கொடுக்கப் பட்டிருப்பது தெரிகிறது.

அடுத்து, மூன்றாம் இராசேந்திரனுடைய 32-ஆம் ஆட்சி ஆண்டில் (கி. பி. 1249) வெளியிடப்பெற்ற கல்வெட்டு ஒன்று, சோழ மண்டலத்தைச் சேர்ந்த மருவேதைய வள நாட்டில் பாலைக்குறிச்சி என்னும் (இவ்வூர் தற்போது பாலக்குறிச்சி என வழங்கப்படுகிறது) ஊரிலுள்ள அரையன் திருமறைக் காடுடையான் என்பவனால் கச்சனம் கோயிலுக்கு விளக்கெரிக்கவும், திருப்பள்ளி எழுச்சி, வைகாசித் திருநாள், திருக்களப்படி ஆகியவற்றுக்காக நிலங்கொடுத்தது பற்றியும், நில எல்லைகளும் குறிப்பிடப்பட்ட செய்திகள் தெரிவிக்கப் பட்டிருக்கின்றன.

சடாவர்மன் சுந்தர பாண்டியனின் பத்தாம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1273) வெளியிடப் பெற்ற கல்வெட்டு ஒன்று, வேளூர்க் கூற்றத்தைச் சேர்ந்த சிறுகீழூர் எனும், முடிமான் தம்பிரான் சதுர்வேதி மங்கலத்தில் முடும்பை என்ற ஊரிலுள்ள சோம தேவபட்டனின் மகனான கேசவபட்டன் திருக்கச்சனமுடைய நாயனார்க்கு வைகாசி மாத வசந்த விழாவிற்காக நிலங்களைத் தேவகன்மிகளிடம் (கோயிலில் பணிபுரிபவர்) தானமாக அளித்த செய்தி கூறப்பட்டிருக்கிறது. இதன் மூலம் இத்திருக்கோயிலில் 12ஆம் நூற்றாண்டிலே வைகாசி வசந்த விழா சிறப்பாக நடந்தேறியதையும், அதற்காகும்

செலவுக்கெனச் சிறுகீழூரில் (தற்போது கீவளூராக இருக்கலாம்) ஒதுக்கப்பட்டமையும் எண்ணத்தக்கது.

இராசராசனின் காலத்தில் வெளியிடப் பெற்ற கல்வெட்டு ஒன்று, பெரு என்ற ஊரின் தலைவனான அரையன் ஆட்கொண்டான் என்பவனிடமிருந்து மூன்று மாகேசுவரர்கள் காசு பெற்றுக் கொண்டு ஒரு நந்தா விளக்கெரிப்பதற்குச் செய்து கொண்ட ஒப்பந்தத்தைச் சுட்டிக் காட்டுகிறது.

குலோத்துங்க சோழனின் ஆறாம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 12, 13) வெளியிடப் பெற்ற கல்வெட்டில் அன்னதான மங்கை என்பவர் இத்திருக்கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த பணத்திற்கு வரும் பொலிசையால் ஒரு சந்தி விளக்கெரிக்கச் செய்த செய்தி காணப்படுகிறது. பொலிசை என்பது வட்டியைக் குறிப்பதாகும். விக்கிரம சோழனின் பன்னிரண்டாம் ஆட்சி (கி.பி.1130) ஆண்டு கல்வெட்டானது, பல்வேறு இடங்களில் உள்ள இத் திருக்கோயில் நிலங்களைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகிறது.

இராசேந்திர சோழ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்து திருக்கச்சனத்துக் கோயில் சிவப்பிராமணர்கள் தனியார் ஒருவரிடமிருந்து 100 காசினைப் பெற்றுக்கொண்டு இறைவனுக்கு ஒரு நந்தாவிளக்கு எரிக்கச் சம்மதித்த செய்தி இரண்டாம் இராசராசனின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 12) வெளியிடப்பெற்ற கல்வெட்டால் அறிய முடிகிறது.

குலோத்துங்கனின் நான்காம் ஆட்சி ஆண்டில்(கி.பி.12, 13) வெளியிடப்பெற்ற கல்வெட்டில் சிவப்பிராமணர்கள் கோயில் கணக்கரிடமிருந்து 100 காசினைப் பெற்றுக் கொண்டு ஒரு நந்தா விளக்கெரிக்கச் செய்து கொண்ட

ஒப்பந்தம் காணப்படுகிறது. குலோத்துங்கனின் 40-ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 1218) வெளியிடப்பெற்ற மற்ற இரு கல்வெட்டுகளின் மூலம், சிவப்பிராமணர்கள் இறைவனுக்கு விளக்கெரிக்கச் செய்து கொண்ட ஒப்பந்தம் காணப்படுகிறது. இதில் குலோத்துங்கனைத் 'திரிபுவனச் சக்கரவர்த்தி மதுரையும், ஈழமும், கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்ட வீரதேவர்' எனக் குறிக்கப் பட்டுள்ளது. இதனால் இச்சோழ மன்னனின் வெற்றியும், வீரமும் புலப்படுகிறது. அவ்வெற்றிகளுக்குப் பின்னரே இக்கல்வெட்டு ஏற்பட்டமையும் அறியலாம்.

இத்திருக்கோயில் பெருமானின் பெருமையையும், சிறப்பையும் பலவாறாக அறிந்து கொண்ட நிறைவோடு மீண்டும் இறைவனை வணங்கிச் சித்தாய்மூர் என்னும் திருச்சிற்றேமத்திற்குச் செல்கிறோம்.



# 3. சித்தாய்மூர் அருள்மிகு பொன்வைத்த நாதர் திருக்கோயில்

இத்திருக்கோயில் திருத்துறைப்பூண்டி – திருவாரூர் பேருந்து வழியில் 'ஆலத்தம்பாடியிலிருந்து (ஆலத்தம்பாடி கச்சனத்திற்குத் தெற்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது) கிழக்கே 3 கி.மீ. தொலைவிலும், திருத்துறைப்பூண்டி— நாகப்பட்டினம் பேருந்து வழியில் 'ஆலங்குடி' என்னும் நிறுத்தத்திலிருந்து மேற்கே 3 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது

இத்திருக்கோயிலைப் புற்றித் திருஞானசம்பந்தர் ஒரு பதிகம் பாடியுள்ளார். அதில்

*"நிறை வெண்டிங்கள் வாண்முக மாதர் பாட நீள் சடைக்*
*குறை வெண்டிங்கள் சூடியோ ராடன் மேய கொள்கையதன்*
*சிறை வண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ் சிற்றேமத்தான்*
*இறைவனென்றே யுலகெலாமே மேத்தி நின்ற பெருமானே"*

எனப் போற்றிப் பரவுகிறார். இத் திருக்கோயிலின் இயற்கையழகை ஞானசம்பந்தர் அழகிய ஊர் எனவும், 'தளிரும் கொம்பும் புள்ளி காமும் பொலியும் சிற்றேமத்தான்' எனவும், இவ்வழகிய ஊரின்கண் அமைந்துள்ள பொழிலில், மேகம் படியும் என்றும், வண்டுகள் பொழிலுள்ள மலர்களில் தேன் உண்டு பண் பாடும் என்றும், தாழ்ந்த வயல்களைக் கொண்ட செல்வம் சிறக்கின்ற ஊர் எனவும் தம் பதிகத்தில், பாடல்தொறும் குறிப்பிடுகிறார். இதிலிருந்து இவ்வூரின் இயற்கை வளத்தினைத் தெள்ளிதின் உணரலாம்.

**காலம்:**

இத்திருக்கோயில் மிகப் பழமையான தோற்றத்துடன் காணப்படுகிறது இது கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. திருக்கோயிலைச் சுற்றி உயர்ந்த மதில்கள் அழகு செய்கின்றன. இத்திருக்கோயில் 'முத்தரசன்' எனும் சோழ மன்னனால் கட்டப்பெற்றதாகத் தலவரலாறு குறிப்பிடுகிறது. அச்செய்தியாவது ; சித்தாய்மூருக்கு வடக்கே உள்ள முத்தரச சோழபுரத்தைத் தலை நகராகக் கொண்டு முத்தரச சோழன் எனும் சிற்றரசன் ஆட்சி புரிந்து வந்தான். இவ்வூர் அக்காலத்தில் ஆத்தி மரங்கள் அடர்ந்த காடாக இருந்தது. இக்காட்டின் வழியே அரண்மனைக்குப் பாற்குடம் செல்வது வழக்கம். காட்டின் வழியே ஏவலர் பாற்குடம் எடுத்துச் செல்லும் பொழுது சில நாட்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் இடருண்டு, பாற்குடமானது விழுந்து உடைவது வழக்கமாயிற்று. இதனைக் கேள்வியுற்ற அரசன் கோபமுற்று அவ்விடத்தை அகழ்ந்து பார்க்க ஆணையிட்டான். நிலத்தை அகழ்ந்த பொழுது சிவலிங்கம் தோன்றியது. முத்தரச சோழமன்னன் தன் தவற்றினை உணர்ந்து அவ்விடத்திலேயே இறைவனுக்குத் திருக் கோயில் எடுப்பித்து வழிபட்டான்

முத்தரையர் என்னும் வமிசத்தினர் தஞ்சை, திருச்சி மாவட்டங்களை ஆட்சி புரிந்தமையைச் சிறப்புப் பெயர் அகராதி விளக்குகிறது. இம்முத்தரச மன்னனின் காலம் கி. பி. பதினோராம் நூற்றாண்டு என்று சு. அ. இராமசாமிப் புலவர் குறிப்பிடுகிறார்.

சித்தாய்மூருக்கும், எட்டுக்குடிக்கும் இடைப்பட்ட ஊரில் 'முத்தரசபுரம்' என்னும் சிறிய கிராமம் ஒன்று இன்றும் உள்ளது. இவ்வாதாரங்கள் முத்தரைய மன்னன் வாழ்ந்ததை உறுதி செய்கிறது. மேலும்,

முத்தரசனால் இவ்வூரில் ஒரு திருக்கோயிலும் கட்டப் பெற்றிருப்பதை அறிய முடிகிறது. இம்முத்தரச மன்னர் பிற்காலச் சோழ மன்னர்களில் ஒரு குறு நில மன்னனாக இருந்திருக்கலாம். இத்திருக்கோயில் திருஞான சம்பந்தரால் 7ஆம் நூற்றாண்டிலே பாடப்பெற்றிருந்தாலும் அப்போது செங்கல் கட்டடமாயிருந்தது, 11ஆம் நூற்றாண்டில் முத்தரச சோழ மன்னனால் கற்றளியாக மாற்றப்பெற்றிருக்க வேண்டும் என்பது உறுதி. இத்திருக்கோயில் பிற்காலச் சோழரது கலைப்பாணியை நினைவுறுத்துவதாகவே அமைந்துள்ளது.

**திருக்கோயிலமைப்பு:**

இத்திருக்கோயிலின் காலப் பழமையையும், இறைவன் அருட்திறத்தையும் மனத்தில் உணர்ந்தவாறே உள் நுழைகிறோம். மூன்று நிலைகளையுடைய திரிதள ராஜகோபுரம் கம்பீரமாகக் காட்சித் தருகிறது. ராஜகோபுரங்கள் மிக உயரமாகக் கட்டப்படும் வழக்கம் பிற்காலச் சோழர் காலத்தவை. இதன் நோக்கம், பல மைல்களுக்கு அப்பால் செல்லும் மக்களுக்கும் இறைவனின் நினைவை உள்ளத்தில் எழுப்பும் பொருட்டே, எங்கிருந்தும் காணும்படி மிக உயரமாகக் கட்டினர்.

இக்கோபுரத்தில் அழகிய சுதைச் சிற்பங்கள் பல காணப்படுகிறது. அடிப்பாகத்தில் பிரம்ம தேவர் தொடர்புடைய பொம்மைகளும், நடுப்பாகத்தில் மகா விஷ்ணு தொடர்புடைய பொம்மைகளும், அதற்கும் மேலே சிவபெருமான் தொடர்புடைய பொம்மைகளும் வைக்கப் படுவது இயல்பு இத் திருக்கோயிலிலும் அதுபோலவே சுதைச்சிற்ப அமைப்புகள் பல காணப்படுகின்றன.

இத்திருக்கோயிலில் அழகிய உள் மண்டபம் ஒன்று உள்ளது. உள்மண்டபத்தில், முன்னராக அமைந்திருப்பது அம்மன் சன்னிதி. அம்மனின் திருப்பெயர் அகிலாண்டேசுவரி. அம்மனின் சன்னிதியை அடுத்து நடராஜர் சன்னிதி உள்ளது. இவற்றை அடுத்து மூலவர் சன்னிதி உள்ளது. இறைவனின் திருப்பெயர் 'அருள்மிகு பொன் வைத்த நாதர்'. இவ்விறைவனுக்கு இப்பெயர் ஏற்பட்டதற்குப் புராணச் செய்தி ஒன்று விளக்கமளிக்கிறது. அச்செய்தியை இனிக்காணலாம்.

இவ்வூரின்கண் வாணிகம் செய்து பொருளீட்டுகின்ற வாணிகச் செட்டிகள் பலர் வாழ்ந்தனர். அந்த இடம் செட்டித்தெரு என அழைக்கப்பட்டது. (இத்தெரு இன்றும் இவ்வூரில் உள்ளது). அவ்வணிகச் செட்டியார்களுள் சங்கரன் செட்டியார் என்பவரும் ஒருவர். இவர் சிவநெறியைப் பின்பற்றி வாழ்பவர். 'அன்பிற்பெரியாள்' என்னும் பெயருடையாளை மனைவியாகக் கொண்டு வாழ்ந்து வந்தார். தன் மனைவியார் கருவுறப் போகும் சில நாட்கள் முன்பாகச் செட்டியார் பொருளீட்டுவதற்குக் கடல்கடந்து சென்றார்.

கணவனைப் பிரிந்த அப்பெண், நாளும் திருக்கோயிலுக்குச் சென்று மெழுகிடுதல், பூத்தொடுத்தல் முதலிய வழிபாடுகளைச் செய்து வந்தாள். இறைவன் அப்பெண்ணிற்காக நாள்தோறும் வீட்டுவாசற்படியில் பொன்னொன்றை வைத்து வந்தான். அவளும் அதை விற்று, தன் வாழ்வை நடத்தி வந்தாள். 'கணவனைப் பிரிந்த காலத்தில் தவறொழுக்கம் மேற்கொண்டு கருவுற்றாள்' என ஊரார் பொய்யுரை கூறி, அவளை ஊரை விட்டு விலக்கியும் வைத்தனர். அவள் இறைவன் அருளொன்றைத் துணையாகக் கொண்டு வாழ்ந்து வந்தாள்.

மகப்பேற்றுக் காலம் நெருங்கியது அகிலாண்டேசுவரி அம்மனைத் துணையாக வேண்டி அழுது புலம்பினாள். அவ்வம்மன் உதவியோடு மகவைப் பெற்றெடுத்தாள். பொருள் தேடச் சென்ற செட்டியார், மனைவியைக் காணும் ஆவலுடன் திரும்பிவந்தார். அவரிடம் சிலர் உன்னுடைய மனைவி தவறொழுக்கம் புரிந்து குழந்தை பெற்றுள்ளாள் எனப் பொய்யுரை கூறினர். இதனைக் கேள்வியுற்ற செட்டியார் செய்வதறியாது திகைத்தார். அவர் மனைவி, 'யான் கற்பு நிலைக் கெடாதவளாயின் நீயே சாட்சியாகி நின்று, என் கணவரின் மனக்கவலையைப் போக்க வேண்டும்' என இறைவனிடம் வேண்டினாள்.

இறைவன் திருவுளம் கொண்டான். அவன் ஆணைவழி ஊரார் அனைவரும் திருக்கோயிலுக்கு வந்தனர். திருக்கோயில் திருக்கதவு தானாகத் திறந்தது. கோயிலின் பின்புறமிருந்த ஆலமரம் முன்புறம் வந்தது. பலிபீடத்திற்கு முன்பிருந்த நந்திதேவர் பின்சென்றார். இக்காட்சிகளைக் கண்ட அனைவரும் வியப்படைந்தனர். உண்மை நிலையை உணர்ந்தனர். அக்கற்புடைய பெண்ணின் மீது, மாசு கற்பித்தலால் அவ்வூர் எரிந்து சாம்பலாயிற்று. அப்பெண்ணுக்குப் பொன்வைத்து உதவியதால் இவ்விறைவனுக்குப் 'பொன்வைத்த நாதர்' என்று பெயர் ஏற்பட்டது. திருச்சிற்றேமம் எனக் குறிக்கப்படும் இவ்வூர், 'சித்தாய்மூர்' எனத் தற்போது வழங்கப்பட்டு வருகிறது. சிற்றேமம் எனும் ஊர் நாளடைவில் திரிந்து சிற்றாய்மூர் ஆகித் தற்போது சித்தாய்மூர் என வழங்கி வருகிறது.

இவ்விறைவனை ஞானசம்பந்தர் தனது பதிகத்தில், 'பெருமான் நீள் சடையுடையவன், குறைவெண் திங்கள் சூடியவன், இறைவனென்றே உலகம் எல்லாம் போற்று

கின்ற பெருமான், எமனைக் காலால் உதைத்து வருத்தி யவன், முக்கண்ணை உடையவன், முனிவும், மூப்பவும் நீங்கப் பெற்றவன், ஒளிருகின்ற வெண்ணூலை அணிந் திருக்கும் மார்பை உடையவன், திங்கள் போன்ற முகம் உடைய மாதர் பாட, திங்களைச் சூடி ஆடல்புரியும் சிற்றேமத்து இறைவன்' என்றவாறெல்லாம் பாராட்டு கிறார்.

"நெடு வெண்டிங்கள் வாண்முக மாதர்பாட
நீள்கடைக்
கொடுவெண்டிங்கள் சூடியோராடன் மேய
கொள்கையான்
படுவண்டியாழ் பைம் பொழிற் பழனஞ்சூழ்
சிற்றேமத்தான்
கடுவெங்கூற்றைக் காலினாற் சாய்த்த
கடவுளல்லனே."

என நாமும் ஞானசம்பந்தர் பதிகப்பாடலைப் பாடி இறைவனை வழிபடுகிறோம்.

இம்மூலவர் சன்னிதிக்கு அருகில் உள்ள சாளரத்தில் தேன் கூடு ஒன்று உள்ளது இது நெடுங்காலமாய் இவ் விடத்தில் அமைந்துள்ளது இதனைப் பற்றி விளக்கமளிக்கிறது புராணச் செய்தி ஒன்று.

முன்பொரு காலத்தில் 'பிரம்மரிஷி' என்பவர், நாள் தோறும் அர்த்தயாம வழிபாட்டிற்கு வந்து இறைவனை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்திருக்கிறார். ஒரு நாள் காலம் தாழ்த்தி வர நேரிட்டது. திருக்கதவும் மூடப்பட்டு விட்டது. இதைக்கண்ட முனிவர், 'தேனீ' உருவம் கொண்டு சாளரத்தின் வழியே உட்சென்று இறைவனைக் கண்டு வணங்கி, அங்கேயே வாழத் தொடங்கினார். இத்திருக்கோயிலில் இன்றும் இவ் விறைவனுக்கு அருகிலுள்ள சாளரத்தில் 'தேன் கூடு,

ஒன்று உள்ளது. இது வியப்பிற்குரிய ஒன்றாக அமைந்திருக்கிறது. திருஞானசம்பந்தரும் இத்திருக் கோவில் பதிகத்தில் 'சிறை வண்டு யாழ்செய் பைம்பொழில்' எனக் குறிப்பதிலிருந்து அன்று தொட்டே இங்கு, தேனீக்கள் இசைபாடுவது இருந்து வந்திருக்கிறது என உணரலாம். இவ்வரிய செய்தியை அறிந்து மேலே செல்கிறோம்.

கருவறையின் வடபக்கத்தில் விக்கிரகங்கள் அமைக்கப் பட்டுள்ளன. இதில், 'வில்லேந்திய வேலவர்' எனும் சிறப்பான சிற்பமும் இடம் பெற்றிருக்கிறது. இவ் வேலவர் இடக்கையில் வில்லும், இடது தோளில் வேலும் வைத்திருக்கின்றார். அருகில் வள்ளியும் தெய்வானையும் முறையே உள்ளனர். இச்சிற்பம் மிக நேர்த்தியான அமைப்புடன் ஐம்பொன் விக்கிரமாக அமைக்கப் பட்டுள்ளது. இது போன்ற திருவுருவம் இவ்வட்டாரத்தில் இல்லை என்பது அறியத்தக்க ஒன்றாகும்.

இதனை அடுத்து, விநாயகர், மகாலெட்சுமி, சுப்பிரமணியர் எனும் சன்னிதிகள் அழகுற அமைக்கப் பெற்றிருப்பதைக் கண்டு வணங்கி மேலே செல்லுகிறோம். திருச்சுற்றின் கிழக்கில் பிரம்மரிஷி, அய்யனார், பைரவர் மாணிக்கவாசகர், சனீசுவரன், சூரியன், விசுவநாதர் ஆகியோரது திருவுருவங்கள் வைக்கப்பட்டுள்ளன.

கோஷ்டங்களில் தெற்கே தெட்சிணாமூர்த்தியும், வடக்கே துர்க்கையம்மனும் உள்ளனர். சண்டிகேசுவரர் சன்னிதி தெற்கு நோக்கி அமைந்துள்ளது. திருக் கோயிலுக்கு எதிரே தல விருட்சமாகிய 'ஆத்திமரம்' மிக உயர்ந்து அகன்ற நிலையில் அமைந்திருக்கிறது. இத்தல விருட்சத்தின் கீழ் சிறிய மண்டபத்தில் விநாயகர் திருவுருவம் உள்ளது. இவ்விநாயகரின் பெயர் 'ஆத்திமர விநாயகர்' என்பதாகும்.

இத்திருக்கோயிலின் வடபால் திருக்குளம் ஒன்று அமைந்துள்ளது. இது 'வேத தீர்த்தம்' என்று வழங்கப் படுகிறது.

**வழிபாடும் திருவிழாக்களும்:**

இத்திருக்கோயிலில் நாள்தோறும் ஐந்து கால வழிபாடு நடைபெறுகிறது. மார்கழி மாதத்தில் மட்டும் ஆறுகால வழிபாடு நடத்தப் பெறுகிறது. வழிபாடுகள் அனைத்தும் ஆகம நெறியின்வழி நடத்தப் பெறுகின்றன.

இத்திருக்கோயிலில் எண்ணிறைந்த திருவிழாக்கள் நடந்தேறி வருகின்றன. மாதந்தோறும் கார்த்திகை நாட்களிலும், மார்கழி திருவாதிரை நாளிலும், கார்த்திகை மாதம் சோமவாரம் போன்ற நாட்களிலும் சிறப்பு விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. இந் நாட்களில் மூலவர் திருவீதியுலா எழுந்தருள்வார். மார்கழி மாதத்தில் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்கள் முறையாக இசைக்கப்படுகின்றன. ஆண்டு தோறும் பாவை மாநாடும் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது.

வைகாசித்திங்கள்தோறும் விசாக நட்சத்திரம் கூடிய பத்து நாட்கள் வைகாசித் திருவிழா நடைபெற்று வருகிறது. இத்திருவிழாவே இத்திருக்கோயிலின் பெருந்திருவிழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது இவ்விழா நாட்களிலும் இறைவன் நாள்தோறும் திருவீதியுலா வருவார். இந்நாட்களில் இன்னிசைக் கச்சேரிகளும், சமயச் சொற்பொழிவுகளும், கலை நிகழ்ச்சிகளும் சிறப்பாக அரங்கேற்றப்படுகின்றன.

**நிர்வாகம்:**

இத்திருக்கோயில் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் கீழ் இருந்து வருகிறது. இத்துறையினால்

நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரி திர்வாகத்தைக் கவனித்து வருகிறார்.

இத்திருக்கோயிலுக்குச் சொந்தமாக 97 ஏக்கர் நன்செய் நிலமும், 49 ஏக்கர் புன்செய் நிலமும் உள்ளன. இத்திருக்கோயிலுக்குச் சொந்தமான சொத்துக்களின் மதிப்பு, ரூ 6,36,000 ஆகும், நகைகளின் மதிப்பு, ரூ. 13,659-75 ஆகும். நிலங்களிலிருந்து ஆண்டு ஒன்றுக்கு 1000 கலம் நெல் கிடைக்கிறது.

**திருப்பணி:**

இத்திருக்கோயிலுள்ள இராச கோபுரமும், சுற்றுப்புற மதில்களும், புதுப்பிக்கப்பட்டு, 31-8-86 அன்று குடமுழுக்கு செய்யப்பெற்றன. தற்போது திருப்பணி செய்வதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

இத்திருக்கோயிலில் ஆறு பணியாளர்கள் உள்ளனர். இத்திருக்கோயிலுக்குச் சொந்தமாக நூலகம் ஒன்று உள்ளது. இதில் சுமார் நூற்றுக்கும் மேற்பட்ட நூல்கள் உள்ளன.

**கல்வெட்டுகள்:**

இத்திருக்கோயிலில் மொத்தம் ஏழு கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. ஏழும் தமிழிலேயே உள்ளன. இக் கல்வெட்டுகள் அனைத்தும் தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் படி எடுக்கப்பெற்று வெளியிடப் பெற்றிருக்கின்றன. இவற்றில் காணப்பெறும் செய்தி யாவது, மூன்றாம் குலோத்துங்கனின் 14ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பெற்ற கல்வெட்டானது இத் திருக்கோயிலின் பெயர் 'திருவாதித்த ஈஸ்வரமுடையார்' எனக் குறிப்பிடுகிறது.

இம்மன்னனின் 35 ஆம் ஆட்சி ஆண்டில் (கி பி 1213) வெளியிடப்பெற்ற கல்வெட்டில், சிற்றாமூர் திருவாதீஸ்வரமுடையார் கோயிலில் முப்பது வட்டத்துப் பிராமணர்கள் செய்த நிவந்தம் குறிக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் இராசேந்திரனின் ஆறாம் ஆட்சி ஆண்டு (கி பி. 1252) கல்வெட்டானது, கோயிலுக்குச் சந்தி விளக்கு எரிப்பதற்குக் கோயிலில் பணிபுரியும் சிலர் பொன்னைப் பெற்றுக் கொண்ட செய்தியைக் குறிப்பிடுகிறது.

இத்திருக்கோயிலின் மேற்கு ஜகதியில் உள்ள கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு கல்வெட்டானது மிகவும் சிதைந்து காணப்படுகிறது. இதில் இருபது கலம் குறியீடாலும் எழுத்தாலும் குறிக்கப்படுகிறது. ஊரின் பெயர் 'சிற்றாமூர்' எனக் குறிக்கப் பட்டுள்ளது. தஞ்சை சேவப்ப நாயக்கர் காலத்தில் (கி.பி.16) வெளியிடப்பெற்ற கல்வெட்டு ஒன்று, சேவப்ப நாயக்கனும் நல்லம நாயக்கனும் நன்மை வரும் பொருட்டு செய்த ஏதோ ஒரு செயல் குறிப்பிடப் பட்டதாகத் தோன்றுகிறது. கல்வெட்டு சிதைந்து உள்ளதால், அவர்கள் ஒப்பந்தம் செய்து கொண்ட நோக்கத்தை அறிய முடியவில்லை.

கருவறையின் மேற்கு ஜகதியில் உள்ள கல்வெட்டில், சிலரிடமிருந்து 150 காசினைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பொலிசூட்டாகத் தினம் சந்தி விளக்கு எரிப்பதற்குச் சிவப்பிராமணர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தை இக்கல்வெட்டு கூறுகிறது.

இத்திருக்கோயிலிலுள்ள மற்றொரு கல்வெட்டில் (கி பி.1920) திருவாய்மூர் இறைவன் தம்பிரானாருக்குச் சொந்தமான ஆலங்குடியைச் சேர்ந்த இருபத்தைந்து

வேலி நிலம் சுட்டப்படுகிறது திருவாய்மூர் என்பது இத்திருக்கோயிலுக்கு 4.கி மீ தொலைவிலுள்ள மற்றொரு தேவாரப்பாடல் பெற்ற தலமாகும். இக்கல்வெட்டுகளின் மூலம் இவ்வூர் சிற்றாமூர் எனவும், இறைவன் பெயர் திருவாதீஸ்வரமுடையார் எனவும் அறிய முடிகிறது.

இதனைத்தவிர செப்புப் பட்டயம் ஒன்று கிடைக்கப் பெற்றுள்ளது. இதில், பிரதாப்சிங் மகாராசர் சாயுபு, பிருதிவிராச்சிய பரிபாலனம் பண்ணுகையில் கலியுகம், முருகு கார்த்திகை சித்தாய்மூர் பொன் வைத்த நாத இறைவனுக்கு மகாணம் அனைவரும் சம்மதித்துக் கொடுத்த பட்டயம் என்றும், நைவேத்திரர் செய்வதற்குக் கலனுக்குனாழி நெல்லும், கமையும் பெர்வழி கொடுப்பது பற்றியும்; பெருமாளுக்கு மூணுத் தொண்ணூறு கொடுப்பது பற்றியும், நத்தம் பள்ளி, புதூர், பனங்காடி, சூரமங்கலம், உத்திரங்குடி, தரகுமருதூர், அகரமானைக் கால், மடப்புரம், பள்ளிச்சந்தம், 'கொமள கொட்டை' நெடிஞ்செசிகுடி, கூமூர் இந்த பதினான்கு கிராமத்துக்கும் கூலிப்பிச்சை பாதி கொடுப்பது என்பது பற்றியும், முதல் ஐந்து சோம வாரங்கள் எந்தந்த ஊர் மகா அபிஷேகம் செய்வது என்ற பட்டியலும், அதனையடுத்து மார்கழி மாதத்தில் தினந்தோறும் பத்து நாட்கள் நெய்வேத்தியம் எந்த ஊர் செய்வது என்ற பட்டியலும் உள்ளது.

'இந்தப் பத்து நாட்களும் அபிஷேகமும் பண்ணி வைக்கிறது. இந்தபடி சம்மதிச்சு பட்டயம் பண்ணி கொடுத்தோம்' என்றுக்கூறி கையெழுத்திட்டுள்ளனர். கையெழுத்திட்டவர்களின் பட்டியலும் இத்துடன் இணைந்துள்ளது.

இச்செப்புப்பட்டயம் குறிப்பிடுகிற ஊர்களின் பெயர்கள் தற்போதும் வழங்கப்பட்டு வருகின்றன. சில ஊரின் பெயர் மட்டும் காலக் கழிவில் மாற்றம்

பெற்றிருக்கின்றன. அவை மடப்பிறம் என்பது மடப்புரம் என்றும், கோமள கொட்டை என்பது கோமளப்பேட்டை என்றும், நெடுஞ்செரிகுடி என்பது நெடுஞ்சினக்குடி என்றும் மாற்றத்துடன் வழங்கி வருகிறது.

இத்திருக்கோயில் மகிமையையும், பெருமையையும் மனத்துள் நினைந்து வணங்கி, அடுத்த தலமாகிய தண்டலைச்சேரியைக் காண, தெற்கு நோக்கிய பயணத்தைத் தொடருகிறோம்.



# 4. தண்டலைச்சேரி அருள்மிகு நீநெறிநாதர் திருக்கோயில்

தண்டலைச்சேரி என்னும் இத்தலம் திருத்துறைப்பூண்டி – திருவாரூர் பேருந்து சாலையிலேயே அமைந்துள்ளது தண்டலைச்சேரியிலேயே பேருந்து நிறுத்தம் உள்ளது. சித்தாய்மூரிலிருந்து புறப்பட்டு திருத்துறைப்பூண்டி- திருவாரூர் பேருந்து சாலையில் உள்ள ஆலத்தம்பாடியை அடைந்து அங்கிருந்து தெற்காக 5 கி.மீ வந்தால் இவ்வரிய தலத்தை அடையலாம்.

திருக்கோயிலைச் சுற்றி எங்கு நோக்கினும் பசுமைக்கோலக் காட்சியே. ஏனெனில், இதைச் சுற்றிலும் கழனிகள் நிறைந்துள்ளன. காண்பதற்கு எழில் மிக்கதாய் மனத்தைக் கொள்ளை கொள்வதாய் அமைந்திருக்கிறது.

திருக்கோயிலின் எதிரே அழகான படிக்கட்டுகளுடன் கூடிய பெரிய திருக்குளம் ஒன்று அமைந்திருக்கிறது. இதுதான் 'ஓமகதீர்த்தம்'. நாமும் தீர்த்தமாடி எதிரே அழகுற அமைந்திருக்கும் திருக்கோயிலை அடைகிறோம்.

**திருத்தண்டலைச் சேரியின் சிறப்பு:**

இத்திருக்கோயில் திருஞான சம்பந்தரின் தேவாரப் பதிகம் பெற்றது. இப்பதிகத்தில் ஐந்து, ஆறாவது, ஏழாவது பாடல்கள் மட்டும் கிடைக்கப் பெறவில்லை. எட்டுப்பாடல்களே தற்போது உள்ளது.

இப்பாடல்களில் திரு[illegible] சம்பந்தர், [illegible]த்திருத்தண்டலை நீநெறியின் வள[illegible]ன எடுத்[illegible]க்கும் விதம் சிறப்புடையது.

''விரும்பும் திங்களும் கங்கையும் விம்மவே
சுரும் புந்தும்பி யுஞ்சூழ் சடையார்க்கிடம்
கரும்புஞ் செந்நெலுங்காய் கமுகின் வளம்
நெருங்குந் தண்டலை நீநெறி காண்மினே''

என்றும்,

''கருவருந்தியினான் முகன் கண்ணனென்
றிருவருந் தெரியா வொரு வன்னிடம்
செருவருந்திய செம்பியன் கோச்செங்கண்
திருபர் தண்டலை நீநெறி காண்மினே''

என்றும் குறிப்பிடுகிறார்.

பெருமை மிக்க சோழனாகிய கோச்செங்கணான் நிறுவிய தண்டலை நீநெறியாக இத்திருக்கோயிலைக் காண்பீராக! இவ்விறைவனை வணங்கி, வழிபட்டு அருள் பெறுவீராக' என ஆற்றப்படுத்தப்படுகிறோம். மேலும், கரும்பும், செந்நெல்லும், கமுகும் இவை வளம்பெற நெருங்கும் சலம்தரும் சிப்பி, முத்து, சங்கம் இவைகளே நிலம்தரும். செம்பொன்னும், முத்தும் எண்ணற்று விளங்கும். ஓடையின் துறையிலே எருமையானது பால் சுரந்துபடியும். இவ்வூரினைச் சுற்றி மதிலும் சுதை மாடமும் நிலவியிருக்கிறது. செருவில் வல்ல கோச்செங்கட் சோழனது திருவுருவம் இத் திருக்கோயிலிலே அமைக்கப்பெற்றிருக்கிறது. அத் திருவுருவத்தின் அமைப்பு மிகவும் நேர்த்தியாக உள்ளது. இவ்வூர் மறையோர்கள் வாழுகின்ற உயர்ந்த ஊர் எனத் தண்டலை நீநெறியின் பெருமையை தம் பாடல்வழி எடுத்துரைக்கிறார் ஞானசம்பந்தர்.

**அரிவாட்டாய நாயனார் வழிபட்ட தலம்:**

அரிவாட்டாய நாயனார் என்னும் சிவனடியார் இத்திருக்கோயில் இறைவனை வழிபட்டு அருள்

பெற்றமையைப் பெரியபுராணம் எனும் காப்பியம் இருபத்து மூன்று பாடல்களில் குறிப்பிடுகிறது. இந்நூல் எழுந்தகாலம் கி.பி 12ஆம் நூற்றாண்டு என்பர். இக்காப்பியத்தை இயற்றியவர் சேக்கிழார் பெருமான். எனவே, இத்திருக்கோயிலானது இலக்கியப் பெருமையும், சான்றோர் அருள் பெற்ற பெருமையும் உடைய அரிய கோயில் எனத்தெரிகிறது.

**திருக்கோயில் வரலாறு:**

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சிறிய இராசகோபுரம் கோயிலை அழகுபடுத்துகிறது. இது மாடக் கோயிலாக அமைந்துள்ளது. திருஞான சம்பந்தரின் தேவாரப் பாடல் பெற்றது என்பதை முன்னரே அறிந்தோம். அவரது பதிகப் பாடலில், 'செருவருந்திய செம்பியன் கோச்செங்கண் நிருபர் தண்டலை நீநெறி' என்னும் வரிகள், இம்மாடக் கோயிலைக் கோச்செங்கணன் எழுப்பினான் என்பதற்கு ஆதாரமாக அமைந்திருக்கிறது. இம்மன்னன் திருக் கோயிலை எடுப்பித்து வழிபட்டான் எனவும் அறிய முடிகிறது. மேலும், இம்மன்னனின் திருவுருவம் இத்திருக் கோயிலில் இன்றும் உள்ளது அறியத்தக்க செய்தியாகும்.

எனவே, இத்திருக்கோயில் கி.பி 5ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்றிருக்க வேண்டும். ஐந்தாம் நூற்றாண்டில் 'கற்றளி' எனும் கருங்கல்லால் கட்டப்படும் அமைப்பு கிடையாது இதனால் இவனால் எழுப்புவிக்கப்பெற்ற திருக்கோயில் செங்கல்லால் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு.

கி.பி 12ஆம் நூற்றாண்டில் இத்திருக்கோயில் சிறப்பான வழிபாட்டுத் தன்மையுடன் அமைந்திருக் கிறது என்பதை அரிவாட்டாய நாயனார் வரலாறு

மூலம் நாம் அறிய முடிகிறது. நாயனாரின் திருவுருவம் ஒன்றும் இத்திருக்கோயிலிலே இடம் பெற்றுள்ளது நோக்கத்தக்க ஒன்றாகும்.

இத்திருக்கோயில் காலக் கழிவால் சிதைந்து விடவே, எழுபது ஆண்டுகட்கு முன்பு தேவகோட்டை ராம. அரு. அரு. இராமநாதன் செட்டியார் அவர்களால் கருங்கல் திருப்பணியாகச் செய்யப்பெற்று சிறப்பாக உள்ளது.

**திருக்கோயிலமைப்பு:**

இராசகோபுரத்தைக் கடந்து உட்சென்றால் மண்டபத்தின் வெளிப்புறச்சுவரில் அழகுறத் தீட்டப் பட்டிருக்கும் ஓவியங்கள் நம்மை ஆட்கொள்ளச் செய்வன வாய் உள்ளன இதில் அரிவாட்டாய நாயனார் இறைவனுக்கு மாவடுவும், செந்நெல்லும் படைக்கின்ற காட்சியும், வழிபாட்டுக்குக் காலதாமதமாகி விட்டதால் தன் கழுத்தை, தானே அரிவாளால் அறிந்து கொள்ள முற்படும் பொழுது இறைவன் தடுத்த காட்சியும், நாயனார்க்கு இறைவன் அருள் வழங்கிய அற்புதக் காட்சியும் காணக்காணக் கண்ணினிக்கும். இவ்ஓவியங்கள் தற் காலத்தில் தீட்டப்பட்டுள்ளன.

அடியாரின் பக்தித்திறத்தை மனதுள் எண்ணி மகிழ்ந்து உள்ளே செல்கிறோம். ஒரே திருச்சுற்று தான் உள்ளே அமைந்திருக்கிறது. திருச்சுற்றின் மேற்கில் விநாயகர், சிவலிங்கம், சுப்பிரமணியர் போன்றவை தனித்தனி மண்டபங்களில் அமைக்கப்பட்டுள்ளன. வடக்குப்பிரகாரத்தில் தெற்குப் பார்த்த சன்னிதியில் அம்மன் திருவுருவம் உள்ளது. அம்மனின் பெயர் ஸ்ரீ. ஞானாம்பிகை.

மகா மண்டபம், அத்னை அடுத்த அர்த்த மண்டபம் என முறையாக அமைந்துள்ளது. மகா மண்டபத்தில் விக்கிரகங்கள் வழிபாட்டிற்கென வைக்கப்பட்டுள்ளன. நடராசர் திருவுருவமும், நால்வர் திருவுருவங்களும், தேவியருடன் கூடிய அரிவாட்டாயநாயனார் திருவுருவம், கோச்செங்கட்சோழனின் திருவுருவம் சிறப்பாக அமைந்துள்ளன. கிழக்கே அமைந்துள்ள நவக்கோள் மண்டபத்தில் புலிக்கால் முனிவர் வழிபட்ட சிவலிங்கம், பதஞ்சலி முனிவர் வழிபட்ட சிவலிங்கம் மற்றும் சுவாமி ஐயப்பன், நவக்கிரகங்கள் போன்றவை அமைக்கப் பட்டிருக்கின்றன.

கோஷ்டங்களில் தெற்கே தெட்சிணாமூர்த்தியும், வடக்கே துர்க்கையம்மனும் உள்ளன. பிரகாரத்தின் வடக்கில் தெற்குப்பார்த்த மண்டபத்தில் சண்டிகேசுவரர் திருவுருவம் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் சிறியதாக இருந்தாலும் தூய்மையோடும் அழகிய நிலையிலும் உள்ளது. இனி மூலவராகிய நீநெறி நாதரை வணங்கி மகிழ்கிறோம்.

**அரிவாட்டாய நாயனார்**
**அருள் பெற்ற வரலாறு:**

இத்திருக்கோயிலுக்கு அருகிலுள்ள கண்ணமங்கலம் (இன்று கண்ணந்தங்குடி என வழங்குகிறது) எனும் ஊரில் சைவ வேளாளர்குடியில் தோன்றியவர் அரிவாட்டாயர். இவர் சிறப்போடு வளர்ந்ததோடில்லாமல் சிவனடியார் களையும் உபசரித்து வந்தார். இவ்விறைவனுக்கு மாவடு கீரை, நெல், அரிசி ஆகியவற்றைப்படைப்பித்துத் தினந்தோறும் வழிபட்டு . இந்நாயனாரைப் பரிசோதிக்கும் முகமாக இறைவன் திருவிளையாடல் புரிந்தான்.

நாயனாருடைய . செல்வம் எல்லாம் அழிந்தது அந்நிலையிலும் இறைவன் அடியவர் வழிபாட்டைக் குறைவின்றி முடித்து வந்தார். ஒரு நாள் தைத் திருவாதிரை அன்று, நாயனார் தமது வழக்கப்படி செந்நெல், மாவடு, கீரை, அரிசி, மலர்க்கூடை ஆகியவற்றை எடுத்துக்கொண்டு சென்றார்.

நடு வழியில் இறைவன் திருவுளப்படி கால்கள் வயல் வெடிப்பில் சிக்கி இடருண்டு போகவே, நாயனாரின் வழிபாட்டுப்பொருள்கள் கீழே விழுந்து, வயல் வெடிப்பினுள் சென்று மறைந்தன. சில வழிபாட்டிற்கு இடையூறு நேர்ந்ததைக் கருதி வருந்தி, அரிவாள் ஒன்றை எடுத்துத்தமது கழுத்தை அறுத்துக் கொள்ளத் தொடங்கினார். நாயனாரின் உள்ளம் கண்ட இறைவன், அவரை ஆட்கொள்ளும் விதமாக வெடிப்பிலிருந்து கையொன்று வெளிப்பட்டு, அவரின் கையைத்தடுத்து, பிடித்துக்கொண்டது அதே நேரத்தில் 'விடேல் விடுகு' என்ற ஒலியும் வெடிப்பினுளிருந்து வெளிப்பட்டது.

இதனைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் அழகுபட விளக்கும் ஒரு பாடலைக் காணலாம்.

"மாசறு சிந்தையன்பர் கழுத்தரி அரிவாட்பற்றும்
ஆசில் வண்கையை மாற்ற அம்பலத்தாடுமையர்
வீசிய செய்யகையுமாவடு விடேல் விடேலென்
றோசையுங் கமரினின்று மொக்கவே யெழுந்தவாறே"

(அரிவாட்டாய நாயனார் புராணம், 18. கையை மாற்ற-கையைத் தடுக்க, ஒக்க-ஒருசேர விடேல் விடேல்-என்பது ஒலிக்குறிப்பு) வெடிப்பினுள் சென்ற பொருள்களை இறைவன் உட்கொண்ட ஓசையும் நாயனார்க்குக் கேட்டது. நாயனார், இறைவனின் திருவருட் திறத்தை எண்ணி எண்ணி வியந்தார். இறைவன் நாயனார்க்கும்

அவரது துணைவியாருக்கும் காட்சி தந்து அருளினார். அரிவாட்டாய நாயனாரது சிற்பத் திருமேனி ஒன்று இன்றும் இத்திருக்கோயிலில் அமைந்துள்ளது.

**திருத்தண்டலை - ஊர்ப் பெயர்க்காரணம் :**

அரிவாட்டாய நாயனார் இத்திருக்கோயில் இறைவனை வழிபட்டு அருள்பெற்றார் எனக்கண்டோம். இவர் தன் தலையைத்தானே அறுத்துக்கொள்ள முற்பட்ட திருக்கோயில் இதுவானதால் இதற்குத் 'திருத்தண்டலை' எனப்பெயர் ஏற்பட்டது. இறைவனுக்குத் 'திருத் தண்டலை நீ நெறி நாதர்' எனப் பெயர் வழங்கி வருகின்றது.

'நெருங்கு தண்டலை நீனெறி காண்மினே' எனத் திருஞானசம்பந்தரும் இவ்வூர்ப்பற்றி குறிப்பிடுகிறார். அரிவாட்டாய நாயனார் அருள் பெற்ற நிகழ்வு திருஞானசம்பந்தர் காலத்துக்கும் முன் நிகழ்ந்திருக்க வேண்டும். 'திருத்தண்டலை நீநெறி' என்னும் இவ்வூர், மருவப்பெற்று 'தண்டலைச்சேரி' என இன்று வழங்கப் படுகிறது.

கோயிலின் தலவிருட்சம் குருந்த மரம் ஆகும். இறைவழிபாடாவது, தொடக்க காலத்தில் மரவழி பாடாகவே இருந்தது. மக்கள் கூடுமிடங்கள், நீதி மன்றங்கள் எனப்பலவும் மரத்தடியிலே நடைபெற்று வந்தன. சிவபெருமானை 'ஆலமர்செல்வன்' என்று குறிப்பிடுவதிலிருந்து ஒரு காலத்தில் இறைவன் மரத்தடியில் வைத்து வழிபடப் பெற்றிருக்கிறான் என்பதை உணரமுடிகிறது இதன் தொடர்ச்சியே 'தலமர வழிபாடு' எனக் கொள்ளல் தகும்.

**வழிபாடு:**

இத்திருக்கோயிலில் நாள்தோறும் நான்கு கால வழிபாடுகள் நடைபெறுகிறது. இவ்வழிபாடுகள் யாவும் ஆகம முறையில் நடைபெற்று வருகின்றன. வழிபடுகின்ற காலத்தில் 'ஓதுவார்' தேவாரப் பண்களை முறையாகப் பாடுகின்றார். செவ்வாய் மற்றும் வெள்ளி நாட்களில் சிறப்பான வழிபாடுகள் நடத்தப்படுகின்றன.

**திருவிழாக்கள்:**

இத்திருக்கோயிலில் நிதிப்பற்றாக்குறை காரணத்தால் பெரிய திருவிழாக்கள் எதுவும் நடத்தப் பெறுவதில்லை. எனினும், தைத் திருவாதிரை விழா சிறப்பான விழாவாகக் கொண்டாடப்படுகிறது. அற்றை நாளில் பஞ்சமூர்த்திகளும், நடராசப் பெருமானும் வாகனங்களில் வீதியுலா வருவர். இத்திருவிழாவின் நோக்கமாவது, அறுவடை முடிந்து மகிழ்ச்சியைக் கொண்டாடும் முகமாக, இறைவனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு கொண்டாடப்படுகிறது. மேலும், அரிவாட்டாய நாயனார் திருவமுது கொண்டு வருங்கால் அப்பொருள் சிதறுண்டு போகவே அதற்காக வருந்தித் தன் கழுத்தைத் தானே அறுத்துக் கொள்ள முற்படும் பொழுது, இறைவன் தடுத்து அருளியதன் நினைவாகவும் இத்திருவிழா கொண்டாடப்படுகிறது. இந்நாளில் அரிவாட்டாய நாயனார் அவரது தேவியாருடன் எழுந்தருளிக் காட்சி தருவார்.

இதனைத் தவிர வருடப்பிறப்பு, மாதந்தோறு[illegible] கிருத்திகை நாட்கள், வைகாசி விசாகம், ஆனி[illegible] திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஆடிவெள்ளிகள், விநாயக[illegible] சதுர்த்தி, நவராத்திரி, விஜயதசமி, தீபாவளி, கந்தசஷ்டி[illegible]

சூரசம்ஹாரம், கார்த்திகை தீபம், சோமவாரங்கள், திருப்பள்ளி யெழுச்சி, ஆருத்தரா தரிசனம், மாசி மகாசிவராத்திரி, பங்குனி உத்தரம் ஆகிய நாட்களில் சிறப்பு முழுக்கு, ஆராதனை வழிபாடுகள் முதலியன நடைபெறுகின்றன. இவ்வழிபாடுகள் நிர்வாகத்தின ராலும், தனியாராலும் நடந்தேறி வருகின்றன. இங்கு வழிபாட்டை முடித்து அடுத்த தலமான கற்பகநாதர்க் குளம் அருள்மிகு கற்பகநாதர் திருக்கோயிலைக் காணும் ஆவல் மீதூரப் புறப்படுகிறோம்.

---

# 5. கற்பகநாதர்க் குளம் அருள்மிகு கற்பகநாதர் திருக்கோயில்

தண்டலைச் சேரியிலிருந்து பேருந்து மூலம் திருத்துறைப்பூண்டிக்கு வந்து, திருத்துறைப்பூண்டியி லிருந்து தொண்டியக்காடு எனும் ஊருக்குச் செல்லும் நகரப்பேருந்து மூலம், இத்தலத்தினை அடையலாம். திருத்துறைப் பூண்டியிலிருந்து தெற்காகச் செல்லும் தொண்டியக்காடு பேருந்து வழியில் பதினேழாவது கல் தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தில்லைவிளாகத்திலிருந்தும், முத்துப்பேட்டையிலிருந்தும், வாய் மேட்டிலிருந்தும் இத்திருக்கோயிலுக்குப் பேருந்தில் வரவாய்ப்புள்ளது. முத்துப்பேட்டை வேதாரண்யம் பேருந்து வழியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. மயிலாடுதுறை அறந்தாங்கி புகைவண்டி வழியில் பாண்டி என்னும் புகைவண்டி நிலைய நிறுத்தத்திலிருந்து தெற்கே ஆறு கி மீ. தொலைவு சென்றாலும் இத்திருக்கோயிலை அடையலாம்.

**திருக்கோயிலின் சிறப்புகள்:**

இவ்வூர்க்கோயில் திருஞானசம்பந்தரால் பாடப் பெற்ற சிறப்பை உடையது. இறைவனின் புகழும், இவ்வூரின் வளமும், பெருமையும், இறைவனை வழி படுவோர் அடையும் நல்லின்பங்களும் சம்பந்தரது பாடலில் குறிக்கப்பட்டுள்ளன.

இவ்வூர் வளத்தினைக்குறிப்பிடும் பொழுது, 'கரும்பு களும் கொடிகளும் பின்னி வளர்ந்த வளமுடைய பொழில் சூழ்ந்த கடிக்குளம்' என்றும், 'அழகிய கொடிகள் கட்டிய மாடங்களையும், மகளிர்குழாம் நீராடும் குளிர்ப்

பொய்கைகளையும், புலால் உண்ணும் புள்ளினம், அன்னங்கள் ஆகியவற்றின் ஒலிகளையும் உடையது கடிக்குளம்' என்றும் கரிய பொழில் சூழ்ந்த கடிக்குளம் என்றும் இவ்வூரின் வளத்தை திருஞானசம்பந்தர் எடுத்துரைக்கிறார். திருக்கோயில் கடற்கரை அருகினில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. அழகிய மணல் வெளிகள், பார்க்கப் பரவசமூட்டும் காட்சியாக அமைந்திருக்கிறது எங்கு நோக்கினும் தென்னை மரச்சோலைகள் அழகுமிக்கதாய் அமைந்திருக்கின்றன.

**திருக்கோயிலின் வரலாறு:**

இக்கோயில் திருஞானசம்பந்தரின் பதிகம் பெற்றது. எனவே, இது 1300 ஆண்டுகட்கும் மேற்பட்ட பழமை யுடையது. மேலும், இத்திருக்கோயிலுக்குத் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த மகாராஷ்டிர மன்னர்கள் பலர் நிவந்தங்கள் அளித்துள்ள செய்தி கூறப்படுகிறது. 'கரையங்காடு' என்னும் ஊர் தஞ்சை மன்னரால் இத்திருக்கோயிலுக்கு அளிக்கப்பெற்றிருப் பதைத் தல வரலாறு குறிப்பிடுகிறது. இது கி.பி. 12ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்றிருக்கவேண்டும். இத்திருக் கோயிலின் கட்டடக்கலை, பிற்காலச் சோழர் கலையை ஒத்தனவாகவே உள்ளன. எப்படியிருப்பினும் இத்திருக் கோயில் மிகப் பழமையான வரலாற்றை உடையது என்பது தெளிவு.

இத்திருக்கோயிலுக்கு அருகில் கோதண்டராமர் திருக்கோயில் உள்ளது. இதில் கருடாழ்வாரின் படிமத் திருமேனி ஒன்று உள்ளது, இத்திருக்கோயில் கருடாழ்வா ரால் வழிபடப் பெற்றிருக்கலாம். இதற்கு வேறு எதுவும் சான்றுகள் இல்லை. ஆனால் பழமையான வரலாற்றை உட்கொண்டது என்பதை உய்த்துணரக்கூடியது. கார்த்திகார்ச்சுனன் என்னும் அரசன் ஒருவன் இத்

திருக்கோயிலை வழிபட்டு, இறைவனிடம் வரங்கள் பலவும் பெற்றான். இதனால் இக்கற்பக நாதருக்குத் திருக்கோயில் எடுப்பித்துச் சிறப்பித்தான் எனத் திருக்கோயில் வரலாறு கூறுகிறது.

**திருக்கோயிலமைப்பு:**

திருக்கோயில் பழமையான தோற்றத்துடன் காட்சியளிக்கிறது. இது கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. திருக்கோயிலின் வடபக்கம் திருக்குளம் ஒன்று உள்ளது. இதுவே விநாயக தீர்த்தம் என்று வழங்கப்படுகிறது.

திருக்கோயிலின் வாயிலில் உள்ள நந்தி, பலிபீடம், கொடிமரம் முதலியவற்றை முறையாக வணங்கி உட்செல்லுகிறோம். மூன்று நிலைகளையுடைய ராஜகோபுரம் உள்ளது. திருக்கோயிலின் கோபுரவாயிலில் விநாயகர், முருகன் உள்ளனர். திருக்கோயிலின் முன்னால் ஆஸ்தான மண்டபத்திற்கு அடித்தளம் இடப் பெற்றுள்ளது. கட்டுமானப்பணி நடந்தேறி வருகிறது. ஒரே பிரகாரம்தான் உள்ளது. கோபுரவாயிலை அடுத்து, உள்ளே சென்றால் தெற்குப் பார்த்த சன்னிதியில் அம்மன் திருவுருவம் உள்ளது. அம்மனின் திருப்பெயர் அருள்மிகு 'பாலசவுந்தரி'.

பிரகாரத்தின் மேற்குப் பத்தியில் அப்பர், சுந்தரர் திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர்போன்ற அருளாளர் களின் திருவுருவமும் இஷ்ட சித்தி விநாயகர், முருகன், கஜலெட்சுமி ஆகியோரும் உள்ளனர். பிரகாரத்தின் வடக்கில் தல்மரமாகப் பலா உள்ளது. பிரகாரத்தின் கிழக்குப்பத்தியின் வலது பக்கத்தில் சனிபகவான், பைரவர், நவக்கிரகம் முதலியோர் உள்ளனர். இடது பக்கத்தில் சூரியன், சந்திரன் உள்ளனர்.

அம்மன் சன்னிதியை அடுத்து இறைவன் சன்னிதி அமைந்துள்ளது. இது கிழக்குநோக்கி அமைந்துள்ளது. திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனின் பெயர் அருள்மிகு கற்பகநாதேசுவரர். லிங்கம் சிறிய திருவுருவமாக அமைந்துள்ளது. இது எட்டுப் பட்டைகளோடு அழகிய வடிவத்துடன் உள்ளது இதனைப்போன்ற சிவலிங்கம் இவ்வட்டாரத்தில் எங்கும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இத்திருக்கோயிலின் தென்பக்கம் கோதண்டராமர் திருக்கோயில் உள்ளது. இத்திருக்கோயிலில் இராமர், இலக்குமணர், சீதை, அனுமன் போன்ற திருவுருவங்கள் அமைந்துள்ளன. இத்திருக்கோயிலின் திருவுருவங்கள் புதைபொருளாக இருந்து கண்டு பிடிக்கப்பட்டு, பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. இவ்விரு திருக்கோயில்களுக்கும் இடையில் 'மாங்கனி பெற்ற விநாயகர்' கோவில் அமைந்துள்ளது சிவபெருமானின் மாங்கனித் திருவிளையாடலில் விநாயகர் இறைவனையே உலகமாகக் கருதி வலம் வந்து மாங்கனி பெற்றது இத்திருக்கோயிலில் தான் எனத் தல வரலாறு கூறுகிறது. இவ்விநாயகப் பெருமானுக்கு 'மாங்கனி பிள்ளையார்' என்ற பெயரும் வழங்கப்படுகிறது. இவ்விநாயகப் பெருமானின் துதிக்கையில் மாங்கனி ஒன்றும் இடம் பெற்றுள்ளது.

**கற்பகநாதரைப் போற்றும் தேவாரப்பாடல்கள்:**

திருஞானசம்பந்தர் தனது தேவாரப் பதிகத்தில் இவ்விறைவனின் அருட்செயல் திறத்தையும், ஆட்கொள்ளும் விதத்தையும், திருவிளையாடல்களையும் பாடல்தோறும் குறிப்பிடுகிறார்.

" பொடிகொண்மேனி வெண்ணூலினர் தோலினர்
புலியுரியதளாடை
கொடிகொளேற்றினர் மணிகிணினென வருகுண்
கழல் சிலம்பார்க்க
கடிகொள் பூம்பொழில் சூழ் தருதகடிக்குத்
துறையுங் கற்பகத்தைத்தம்
முடிகள் சாய்த்தடிவீழ்தரு மடியுரைமுன் வினை
மூடவே "

எனும் பாடலில் திருநீறு பூசிய மேனியரும் வெண்ணூல் பூண்டு, புலித்தோலணிந்தவரும், விடைக் கொடியை உடையவரும், காலிற்கட்டிய மணிகள் கிணின், கிணின் என்று ஒலிக்கவும், சிலம்பு கழல் ஆர்க்க வருபவனுமாகிய கற்பக நாதரைத் தம்முடி வீழ்த்து அடிபணியும் அடியவரைப் பழமையான வினைகள் சூழாது எனக் குறிப்பிடுகிறார்.

மற்றொரு பாடலில் 'விண்ணோர் தொழும் ஒளி வடிவினரும், தளர்ச்சியில்லாதவரும், வேறுபட்ட செயல்களை உடையவரும் மண்ணுலகில் உள்ளோர் விழா எடுத்துத் துதித்து, அன்பராய் வழிபடின் அவர்க்கு அருளும், வள்ளலும் ஆகிய கற்பகநாதரை நெருங்கிச் சென்று பண்ணாரப் பாடும் அடியவர் கேடிலர், பழியிலர், புகழுடைவர் எனவும் புகழ்ந்துரைக்கிறார்.

அடுத்த பாடல் மூலம், சினத்தோடு வந்த யானையை உரித்து அதன் தோலைப் போர்த்தும், புலியின் தோலை உடுத்தும், கொடிய நாகத்தைப் பூண்டும், பார்வதிதேவியைப் பாகமாகக் கொண்டு விளங்குவோனுமாகிய கடிக்குளத்து கற்பகத்தை எவ்விடத்திலிருந்தும் ஏத்தித் துதித்து இன்புறும் அடியவர்களை இடும்பைகள் அணுகா என்றும், கங்கையைத் தரித்தது போன்ற நீண்ட

சடைமுடி உடையவனும், முத்துக்களின் சொத்தாக விளங்குவோனும், உலகிலுள்ளோர் பவளம், பொன் போன்று போற்றிக் கொள்ளத் தக்கவனும் ஆகிய இவ்விறைவனை ஏத்துவார் வினை தேய்வது திண்ணம் எனத் தமது பாடலால் உரைக்கிறார் ஞானசம்பந்தர்.

மாதொரு பாகத்தானும், மதி, கங்கை, பாம்பு, கொன்றை, ஊமத்தை ஆகியவற்றைச் சடையில் அணிந்தவனும், காதில் குழையணிந்தவனும் ஆகிய கடிக்குளத்து இறைவனை வழிபடுவோரை வினைகள் தீண்டா என்றும்,

குண்டர்களாகிய சமணரும், பௌத்தரும் குறிக் கோளோடு கூடிய நெறி நில்லாதவரானவர். அவர்கள், மெய்யுரை போலக் கூறுவனவற்றை மெய்யெனக் கொள்ளாதீர். விடமுண்ட கண்டரும், திருநீறணிந்தவரு மாகிய கடிக்குளத்து ஈசராகிய கற்பகநாதரது தொண்டர்கட்கு தொண்டராயினாரைப் பணிமின். சிவநெறி எளிதாம் எனத் திருஞானசம்பந்தர் தம் பதிகத்தின் மூலம் உணர்த்துகிறார்.

**விக்கிரக சிற்பங்கள்:**

இத்திருக்கோயிலில் நடராசப் பெருமானின் தாண்டவச் சிற்ப திருமேனி ஒன்று உள்ளது. இது ஆனந்தத் தாண்டவ அமைப்பில் வடிவமைக்கப் பட்டுள்ளது. இதனுடைய காலம் கி.பி பன்னிரண்டாம் நூற்றாண்டு என்பர் திரு. ச. தண்டபாணி தேசிகர். பிரபை இருபத்தொன்று தீக்கொழுந்துகள் உடையதாகச் சோழ நாட்டுச் சிற்பத்திறத்தை அறிவிப்பதாக உள்ளது. இவ்விக்கிரகத்தின் விரல் நுனியில் தீயகல் உள்ளது. ஆடுகின்ற பாவனைக்கேற்ப அரைக்கச்சையும், குழந்தை முயலகன் மீது திருவடியும் அமைக்கப்பட்டுள்ளன. இவை

இந்நடராசரது சிறப்பைத் தெரிவிப்பனவாக உள்ளன. இங்கு இச்சிற்பம் உற்சவத்திருமேனியாக அமைந்திருக்கிறது.

இத்திருக்கோயிலில் மற்றொரு நடராசர் சிற்பமும் இடம் பெற்றுள்ளது. இதில் நடராசப் பெருமானின் திருநோக்கு இடப்பக்கமாக உள்ளது. இறைவனின் சடைபக்கத்துக்குப் பத்தாக இருபதும் முடி உச்சிக் கொண்டையாகவும், கொண்டை மட்டத்தில் உடுக்கை ஏந்திய கை உயர்ந்திருப்பது, ஒலிக்கப்படுவதையும் குறிப்பிடுவதாக உள்ளது. தூக்கிய திருவடியும், அழகொளிர்ச் சிரிப்பும், நீண்ட முகமும் தனியழகு செய்வனவாய் உள்ளன. இது கி.பி. பதினான்காம் நூற்றாண்டைச் சார்ந்தது என ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

**அநுமன்:**

இத்திருவுருவம் தனது இடக்கரத்தோடு இணைந்த வலக்கரத்தால் வாய்பொத்தி நிற்கின்ற காட்சி அமைப்பினையுடையதாக உள்ளது. இதனைப் போன்ற திருவுருவம் இவ்வட்டாரத்தில் தில்லை விளாகம் என்னும் ஊரிலுள்ள இராமர் கோயிலிலும் உள்ளது. இவ்விரு கோயில்களைத் தவிர, இவ்வட்டாரத்தில் நின்றகோலத்தில் அநுமன் திருவுருவம் வேறு எங்கும் இல்லை.

**வழிபாடுகள்:**

இத்திருக்கோயிலில் நாள்தோறும் நான்கு கால வழிபாடுகள் நிகழ்கின்றன வழிபாடுகள் யாவும் ஆகம முறையில் சிவாச்சாரியார்கள் மூலம் முறைப்படி நடத்தப் பெற்று வருகின்றன. இங்கு ஆனித்திருமஞ்சனம், ஆடிச் சுக்கிரவாரம், நவராத்திரி, திருக்கார்த்திகை, கார்த்திகைச் சோமவாரம், திருவாதிரை, தைப்பூசம், மகாசங்கராந்தி

சிவராத்திரி, வருடப்பிறப்பு போன்ற சிறப்பு நாட்களில் வழிபாடுகள் சிறந்த முறையில் நடத்தப்பெற்று வருகின்றன.

**திருவிழாக்கள் :**

இத்திருக்கோயிலில் பங்குனி உத்திரம் சிறப்பான விழாவாகக் கொண்டாடப்படுகிறது அன்று இறைவன் புறப்பாடும், பஞ்ச மூர்த்திகளின் புறப்பாடும் நிகழ்கிறது. அன்று அவ்வூர் மக்களுக்கு அன்னதானம் வழங்கப் படுகிறது. ஆடிமாத இறுதி வெள்ளியன்று பாலசவுந்தரி அம்மனுக்குக் 'குத்துவிளக்கு' வழிபாடு நடைபெறுகிறது. 1008 குத்துவிளக்கு ஏற்றி வழிபாடு நிறைவேற்றப் படுகிறது.

இவ்வாறாக, இறைவனின் வரலாற்றையும், அவன் அருட்திறத்தையும் உணர்ந்தவண்ணம், வினை அகற்றும் அவ்விறைவனின் புகழைப்பாடி வழிபட்டு வெளியேறு கிறோம். இதனை அடுத்து, நாம் செல்லும் திருக்கோயில் 'இடும்பாவனம்'. இடும்பாவனம் கற்பக நாதர் திருக் கோயிலிலிருந்து மேற்கே 1 கி.மீ தொலைவில் உள்ளது.

# 6. இடும்பாவனம் அருள்மிகு சற்குணநாதேசுவரர் திருக்கோயில்

அருள்மிகு சற்குண நாதேசுவரர் திருக்கோயில், திருத்துறைப்பூண்டி - தொண்டியக்காடு பேருந்து வழியில் 15கி.மீ. தொலைவிலும், திருத்துறைப்பூண்டி — முத்துப் பேட்டை பேருந்து வழியில் 'கோபால சமுத்திரம்' எனும் ஊரிலிருந்து எட்டு கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது. மயிலாடுதுறை — அறந்தாங்கி புகை வண்டி வழியில் 'பாண்டி' என்னும் புகைவண்டி நிலைய நிறுத்தத்திலிருந்து தெற்கே ஏழு கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது.

**திருக்கோயிலின் சிறப்பு:**

இது திருஞானசம்பந்தரின் தேவாரப் பதிகம் பெற்றது. இவர் இங்குக்கண்ட கவின்மிகு காட்சிகளைச் சந்தப்பாடல்களாகப் பாடியிருக்கிறார். அவை, 'சங்கு களையும், கப்பல்களையும் உடையதாயியங்கும் கீழ்க் கடலை அடுத்துள்ளதும், சினமும், மிக்க திறனும், வாள்வலியும், கோரைப்பற்களும் உடைய இடும்பனது தலைநகராகிய குன்றளூரை (இது தற்போது குன்னலூர் என மருவப் பெற்றுள்ளது) அடுத்துள்ளதும், மிக்க தவமுடையோர் வாழ்வதுமாகிய இடும்பாவனம்' என இவ்வூரின் பெருமையை எடுத்துரைக்கிறார்.

மேலும், 'எழில் பொருந்திய இறைவர்க்கு இடம், குலைகள் தள்ளிய வாழை மரங்கள் நின்றந்த பொழில்களை, உடையதும், காலை, மாலை ஆகிய அழகிய காலங்களில் தொண்டர்கள் பாடி ஆடி இறைவன் புகழைக் கூறிக்களிக்கும் முழங்கில்களோடு கூடிய வீடுகளைக் கொண்டதும், மலர்கள் சூடிய கூந்தலை

யுடைய மங்கையர் மிகுந்து வாழ்வதும் குன்றளூரை அடுத்துள்ள இடும்பாவனம்' எனப்போற்றியுரைக்கிறார்.

'மலர் விரிந்த நீர் நிலைகளை உடையதும், செந்நெல் வயல்களை உடையதும் ஆகிய இடும்பாவனம், கொடிகளைக் கட்டிய நெடிய மாட வீடுகளுடைய குன்றளூரை அடுத்துள்ளதும், கடல் அலைகள் கரையை இடித்தலைச் செய்வதுமாகிய இடும்பாவனம்' என ஞானசம்பந்தர் பாடுவதிலிருந்து, கடலானது இத்திருக்கோயிலுக்கு அருகினிலேயே இருந்ததை உணரமுடிகிறது. ஆனால் தறபோது 4. கி.மீ தூரத்தில் கடல் உள்ளது. இவ்வூரில் எங்கு நோக்கினும் தென்னைமரங்களே தென்படுகிறது. அம்மரங்கள், பசுமையாகத் தோன்றும் காட்சி காண்போரைக் கவர்ந்திழுக்கும் தன்மையுடையது.

**புராணச் செய்திகள்:**

அரக்கர் குலத்தைச் சேர்ந்த இடும்பன், இடும்பை ஆகியோர் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்கள், வில்வக் காடாக விளங்கிய இவ்வூரிலும், ஏனைய காடுகளிலும் திரிந்து, விலங்கு, பறவை ஆகியவைகளையும், மனிதர் களையும் கொன்று, தின்று உயிர் வாழ்ந்து வந்தனர். அவர்களில் இடும்பை முற்பிறப்பில் நல்வினைகள் செய்திருந்த காரணத்தால், சற்குணநாதேசுவரரைக் கண்டு, அவர்மேல் பக்தி செலுத்தி வந்தாள், இவ்விறைவனை வழி பட்டதால் அவள் மனம் தூய்மை பெற்றது. ஊன் உணவை விடுத்து, காய்கனிகளை உண்டும், பண்பாடுகள் பலவற்றைப் பெற்றும் உயிர் வாழ்ந்து வந்தாள். துரியோதனன் ஒருகால், பாண்டவர்களை அழிக்கும் எண்ணத்துடன் அவர்களை அரக்கு மாளிகையில் அகப்படுத்தினான். அவனது வஞ்சகத்தை அறிந்த வீமன், சுருங்கை வழிசெய்து,

தம் உடன் பிறந்தார்களையும், தாயையும் வெளிக்கொணர்ந்து காப்பாற்றினான். அவர்களை அவ்வாறு வெளியே கொண்டு வந்த இடம் இடும்பாவனம் என்னும் இவ்வூரேயாகும்.

வீமனைத் தனியே கண்ட இடும்பை, அவனை மணந்து கொள்ள விரும்பினாள். வீமன் மறுத்தான். அவ்வேளை வியாசமுனிவர், இடும்பையும் வீமனும் முற்பிறப்பில் அரச குடும்பத்தில் பிறந்து கணவனும் மனைவியுமாக வாழ்ந்தவர்கள் என்றும், இடும்பை சிவனடியார் தோற்றத்தை இகழ்ந்த குற்றத்தால் அரக்கர் குலத்தில் தோன்றினாள் என்றும் கூறி முற்பிறப்பு வரலாறு உணர்த்தினார். பின்பு வீமனிடம் அவளை மணந்து கொள்ளுமாறு கூறி, இடும்பையைச் சீதபுஷ்கரணி தீர்த்தத்தில் மூழ்கச்செய்து பேரழகு உடைய வளாக்கி இருவருக்கும் மணம் முடித்து வைத்தார். இருவரும் இவ்விறைவனை வழிபட்டு ஓராண்டுக்காலம் அங்கேயே வாழ்ந்தனர். இடும்பை வழிபட்டு நல்வாழ்வும் பெற்றதால், இவ்வூருக்கு 'இடும்பாவனம்' என்ற பெயர் வழங்கலாயிற்று என்பர்.

**எமனுக்கு அருளியது:**

இறைவன் தன்னை, அன்போடு வழிபட்ட மார்க்கண்டேயரின் உயிரைக் கொண்டு செல்ல வந்த எமனைக் காலால் உதைத்துக் கொன்றார். பின் திருமால், பிரமன், நிலமகள் முதலிய தேவர்கள் வேண்ட, அவனை எழுப்பினார். உயிர் பெற்றெழுந்த எமன், தன் கடமையைச் செய்ய முற்படும்போது தன் சக்தியெல்லாம் இழந்திருப்பதை உணர்ந்தான். அவன் தன் இழந்த சக்தியை அருளும்படி, இறைவனை வேண்டி தனது ஆற்றலைத் திரும்பப் பெற்றான். அவன் அதுபொழுது

நீராடி வழிபட்ட தீர்த்தம் 'எமதீர்த்தம்' என இன்றும் வழங்கி வருகின்றது.

இறைவனின் மணக்கோலக் காட்சியைக் காட்டும் திருவுருவம் ஒன்று, இத்திருக்கோயிலில் உள்ளது. இதனால் இதற்கு, 'மணக்கோல நகர்' என்ற பெயரும் வழங்கி வருகிறது. அகத்தியர் திருவுருவம் ஒன்றும் இத் திருக்கோயிலில் அமைக்கப்பட்டுள்ளது. தலவிருட்சமாக வில்வமரம் உள்ளது.

**திருக்கோயில் வரலாறு:**

இத்திருக்கோயில் மீது திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகம் ஒன்று பாடியுள்ளார். எனவே, இது 1300 ஆண்டுகட்கு பழமையுடையது என்பது தெளிவு. செவி வழியாக அறியப்பெறும் செய்திகளில் மகாராஷ்டிர மன்னர்கள் இத்திருக்கோயிலிற்கு இறையிலியாகவும், விளக்கெரிப்பதற்கு நிவந்தமாகவும் மானியங்கள் அளித்தனர் எனக் கூறப்படுகிறது.

இத்திருக்கோயில் பிற்காலச் சோழர் காலத்தில் கட்டப்பெற்றது எனத் தலவரலாறு கூறுகிறது. எந்தச் சோழரால், எப்பொழுது நிறுவப்பட்டது என்ற செய்தி தெரியவில்லை. ஆனால், சோழர் காலத்துக் கலை அமைப்புகள், பாணிகள், முதலியவை அமைந்துள்ளன. எனவே, இது சோழர் காலம் என்பதில் மாற்றமில்லை.

**திருக்கோயிலமைப்புகள்:**

திருக்கோயிலின் சார்பில் அமைக்கப்பெற்றிருக்கும் 'மீனாட்சி ஐதீக வளைவு' நம்மை, திருக்கோயிலுக்குள் அழைக்கும் பான்மையுடன் உள்ளது. திருக்கோயில் கிழக்கு நோக்கிய அமைப்பில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது. எதிரே பெரிய திருக்குளம் ஒன்று மிக நேர்த்தியான

அழகுடன் கவின்மிக்கதாய்க் காட்சியளிக்கிறது. இதுவே, பிரம்ம தீர்த்தம் என வழங்கப்படுவதாகும்.

இராஜகோபுரம் மூன்று நிலைகளையுடையதாய் அமைந்திருக்கின்றது. இராசகோபுரத்தைக் கடந்தால் கோயிலின் வாயிலில் நந்தி, பலிபீடம், கொடிமரம் போன்றவை ஒழுங்கான அமைப்புடன் அமைக்கப் பட்டுள்ளது இவற்றை வணங்கி உட்சென்றால், பிரகாரத்தின் கிழக்குப் பத்தியில் இடதுபுறத்தில் சூரியன், அகத்தியர், இடும்பை உருவங்களைக் காணமுடியும். கன்னி மூலையில் விநாயகர் தனிக் கோயிலில் விளங்கு கின்றார். பிரகாரத்தின் மேற்கில் விநாயகர், சனிபகவான், கஜலெட்சுமி முதலிய திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. வடமேற்கு மூலையில் முருகன் தனிக்கோயிலில் எழுந்தருளியுள்ளார்.

திருக்கோயிலின் கிழக்குப்பத்தியின் வலது பக்கத்தில் பைரவர், சுந்தரர், அப்பர், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர் போன்றோரின் திருமேனிகள் தனித் தன்மை யுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோஷ்டங்களில் தெற்கே தெட்சிணாமூர்த்தியும், மேற்கே இலிங்கோத் பவரும், வடக்கே பிரமன், துர்க்கை ஆகியோர் திருமேனிகள் இடம் பெற்றுள்ளன.

மகா மண்டபத்தில் வெள்ளை விநாயகர் திருவுருவம் உள்ளது மண்டபத்தை அடுத்து அர்த்த மண்டபம் உள்ளது. இதனை அடுத்து உட்சென்றால் மூலவர் சன்னதி உள்ளது. மூலவரின் பெயர் அருள்மிகு சற்குண நாதர். இச்சிவலிங்கத்தின் பின்னால் மணக்கோலத்தில் இறைவன் வீற்றிருக்கிறார்.

திருக்கோயிலின் வாயிலில் நுழைந்தால் வலப்பக்கம் அம்மன் சன்னதி உள்ளது. அது தெற்குப் பார்த்த

முகமாக அமைந்திருக்கிறது. அம்மனின் திருப்பெயர் 'மங்கள நாயகி அம்மன்' அம்மன் சன்னிதியை ஒட்டி உற்சவ விக்கிரகங்கள் உள்ளன. இதனை அடுத்து நடராஜர் மற்றும் பஞ்ச மூர்த்திகள் உள்ளனர்.

**படிமச் சிற்பங்கள்:**

சிற்பம் என்பது வடிவக்கலையாகும். வடிவத்தை அமைக்கும் முறையை ஒட்டிச் சிற்பத்தைப் பலவகையாகப் பிரிப்பர். வடிவம் முழுவதையும் தனியாகக் காட்டும் ஒரு வகைப்படிமங்கள் இவ்வகையைச் சார்ந்தவை திருக்கோயில்களில் இப்படிமங்கள் உன்னத இடம் பெற்று வந்திருக்கின்றன. இப்படிமங்கள், காண்போரை ஒன்றிணைக்கின்ற கலைத்திறனையுடையனவாக அமைந்திருக்கும் இங்கும் சில படிமச்சிற்பங்கள் உள்ளன. இத்திருக்கோயிலில் மங்கள நாயகி மண்டபத்தின் பின்புறமுள்ள ஒரு தூணில் 'ஆஞ்சநேயர்' படிமச்சிற்பம் காணப்படுகிறது. இது வழிபாட்டுக்கும் உரிய திருவுருவமாக இருந்து வருகிறது. இச்சிற்பம் சிறப்பாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

**வெள்ளை விநாயகர் :**

மகா மண்டபத்தில் உள்ள விநாயகர் 'வெள்ளை விநாயகர்' என அழைக்கப் பெறுகிறார். சிறிய அமைப்புடன் காட்சித் தருகிறார். இது போன்ற அமைப்புடைய வெள்ளை விநாயகர் 'திருவலஞ்சுழி' என்னும் ஊரிலுள்ள அருள்மிகு பிரம்மபுரீஸ்வரர் திருக்கோயிலிலும் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. சிவஸ்தல மஞ்சரியில், இவ்விரு விநாயகரும் சிறப்பாகக் குறிக்கப் பட்டுள்ளனர்.

**நர்த்தன கணபதி:**

இங்கு 'நர்த்தனகணபதி' என்னும் விநாயகர் திருமேனி ஒன்றும் உள்ளது. இதில் விநாயகர் நிற்கின்ற கோலம் சிறிய வடிவமைப்புடன் உள்ளது. இதுபோல் திருத்தங்கூர் திருக்கோயிலிலும் ஒரு திருமேனி உள்ளது. இத்திருமேனி நல்ல கலைத்திறத்துடன் படைக்கப் பட்டுள்ளது.

**நடராசர்:**

இத்திருக்கோயிலில் அருள்மிகு நடராசரின் திருமேனி ஆனந்ததாண்டவ அமைப்பில் வெகு அழகாகக் காட்சி யளிக்கிறது. இந்நடராசப் பெருமானுக்குப் பக்கத்துக்கு ஒன்பது சடைகளாக விரிந்து காணப்படுகின்றன. திருமுடி உச்சிக்கொண்டையாகவும், மயிலிறகு முதலிய அணிகள் கொண்டதாகவும் காட்சி தருகின்றது. உடுக்கை ஏந்தி நிற்கும் வடிவம், விரல் நுனியில் உடுக்கையை வெளிப்புறமாக அதாவது, உள்ளங்கை வெளியில் தெரியும்படி அமைக்கப்பட்டுள்ளது. திருவடிகள் இரண்டும் முழங்கால் அளவில், இலக்கணப்படி வளைந்த அமைப்பினை உடையதாக உள்ளது. பிரபை மட்டும் பீடத்தின் சிறிது வளைந்து குறுகிய மகரவாய் உடையதாக அமைந்திருக்கின்றது. இது கி.பி. 12ஆம் நூற்றாண்டு சிற்பம் எனக் கூறுவர்.

**நிர்வாகம்:**

இத்திருக்கோயில் நிர்வாகம், இந்துசமய அறநிலையத் துறையின் ஆட்சியின் கீழ் இருந்து வருகிறது. அத்துறையின் மூலம் நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரி திருக்கோயிலில் நிர்வகித்து வருகிறார்.

இத்திருக்கோயிலுக்கு 162 ஏக்கர் நன்செய் நிலமும், 1003 ஏக்கர் புன்செய் நிலமும் உள்ளன. இதனைத் தவிர குடியிருப்புக்கட்டிடங்களும் உள்ளன. நகைகள் மற்றும் வாகனங்களின் மதிப்பு ரூ.1,701647-45 ஆகும்.

இத்திருக்கோயிலுக்குப் பல வகையிலிருந்தும் வருமானம் பெறப்படுகிறது. முக்கிய வருமானம் தென்னையிலிருந்தே பெறப்படுகிறது. 1395 ஆம் பசலியின் வருமானம் ரூ. 6,00,000/- ஆகும். கோயிற்பணிகளில், வெளித் துறையில் 24 பேரும், உள்துறையில் 14 பேரும் பணியாற்றி வருகின்றனர்.

**திருப்பணி :**

இராஜ கோபுரம் மற்றும் சிற்பங்கள் சிதைந்தவற்றை ரூ 63,000/- செலவில் 26-4-72 முதல் புதுப்பிக்கப்பெற்று வருகிறது. திருஞானசம்பந்தர் நுழைவு வாயில் ஒன்று ரூ. 17,500/- செலவில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இதனைத் தவிர பல்வேறு அபிவிருத்தித் திட்டங்கள் நடைபெற்று வருகின்றன.

**சமுதாயப்பணி :**

திருக்கோயிலின் உபரி நிதியின் மூலம் சமுதாயப் பணிகள் நடந்தேறி வருகின்றன. திருக்கோயிலின் மூலம் நன்கொடையாகத் தில்லைவிளாகம் கோதண்டராமர் கோயிலுக்கு, ரூ 10,000. இதர கோயிலுக்கு ஏறக்குறைய ரூ 20,000. தமிழக அரசின் கல்வி வளர்ச்சிக்கு ரூ. 25,000. இடும்பாவனம் உயர் நிலைப்பள்ளிக்கு ரூ. 10,000 திருக்குவளைமுத்து வேலனார் நூலகத்திற்கு ரூ. 2,500/- இவற்றைத் தவிர கடனாக இதரத் திருக்கோயில்களுக்கு ரூ. 20,000 மும் இதுவரை அளிக்கப் பெற்றுள்ளது.

இத்திருக்கோயிலின் மூலம் அவ்வூர் மக்களின் குடிநீர் வசதிக்காக ஏறக்குறைய ரூ 8,000/- செலவில் குடிநீர்த் தொட்டி ஒன்று கட்டப்பட்டு, 29-10-72ல் தஞ்சை ஆணையரால் திறக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது. பொதுமக்கள் பயன்படுத்தும் திருக்கோயிலுக்குச் சொந்தமான திருக்குளம் 19,000 செலவில் படித்துறைகள் அமைக்கும் பணி நடந்தேறியுள்ளது. கோயிலுக்கு வருகைதரும் பக்தர்கள் தங்குவதற்கென்று ஓர் இல்லமும் கட்டப்பெற்றுள்ளது.

சற்குணநாதேசுவரரை வணங்கிய களிப்புடன் அடுத்த தலமாகிய கோயிலூர் அருள்மிகு மந்திரபுரீஸ்வரர் தலத்தினை வழிபடும் பொருட்டுப் புறப்படுகிறோம்.

இடும்பாவனத்திலிருந்து மேற்காகச் செல்லும் வாய்மேடு - முத்துப்பேட்டை பேருந்தின் மூலம் முத்துப்பேட்டையை அடைந்து, அங்கிருந்து மன்னார்குடி பேருந்து சாலையில் 2 கி.மீ தொலைவில் உள்ள இத் தலத்தினை அடைகிறோம்.

---

# 7. கோயிலூர் அருள்மிகு மந்திரபுரீஸ்வரர் திருக்கோயில்

திருத்துறைப்பூண்டி-அறந்தாங்கி புகைவண்டி வழியில் முத்துப்பேட்டை புகைவண்டி நிலைய நிறுத்தத் திலிருந்து, வடக்கே ஏறத்தாழ இரண்டு கி. மீ தொலைவிலும், முத்துப்பேட்டை-மன்னார்குடி பேருந்து வழியில் மண்சாலையிலிருந்து ஏறத்தாழ 1 கி.மீ தொலைவிலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**திருக்கோயிலின் சிறப்புக்கள்:**

இவ்வூரின் சிறப்பினைக் குறிக்குமிடத்து திருஞான சம்பந்தர் தனது பதிகத்தில், இடுகாட்டைத் தமது இடமாகக் கொண்டவனாகிய இறைவன் உறையுடமாகிய இவ்வூர், வானளாவிய மதில்களையும், பொழில்களையும் உடைய திருவுசாத்தானமாகும். நீர்! உய்ய விரும்பினால் சமண பௌத்தர்களின் உரைகளைப் பொய்யெனத் தள்ளி வழிபட்டு அவன் புகழ் மொழிகளைக்கூறுவீராக எனப்பாடுகிறார்.

மேலும், குடகு மலையினின்று இழிந்து வரும் காவிரி நீர் பாயும் வயல் வளம் உடைய புகலிக்கு மன்னராகிய ஞானசம்பந்தர், கடல் அலைகள் வந்து மோதும் கரையை அடுத்துள்ள திருவுசாத்தானத்து இறைவர் மீது உரைக்கும் உரையான மாலையாகிய இத்திருப்பதிகத்தை ஓதுவார் நரைதிரையின்றி ஞானநெறி கூடுவர் எனத் தம் பாடல் வழி தெரிவிக்கிறார்.

இவ்வூர், திருஞானசம்பந்தர் காலத்தில் கடற்கரைக்கு அருகினிலேயே இருந்திருக்கிறது. ஆனால், இன்று மிகவும் தொலைவில் கடல் உள்ளது.

இராமர் அணைகட்ட மந்திர உபதேசம் பெற்றது இத்திருக்கோயிலில் எனத் தலவரலாறு கூறுகிறது.

**புராண வரலாறுகள்:**
**இராமர் மந்திர உபதேசம்பெற்றது.**

இராமர் மந்திர உபதேசம் பெற்றுச் சீதையை அடையச் சேது பந்தனம் செய்வதற்கு வேதாரண்யம், மணமேற்குடி முதலிய பல இடங்களில் முயற்சி செய்தார். அணைகட்ட முடியாமல் தடைகள் பலவும் ஏற்பட்டன. இராமர் சிவபெருமானது அருளைப் பெற்றே, தன் பணியைத் தொடரவேண்டுமென்று நினைத்து, இத் திருக்கோயிலுக்கு வந்து இறைவனை வழிபட்டார். இறைவனின் மந்திர உபதேசம் பெற்று சேதுபந்தனம் செய்து முடித்தார் எனக் கூறப்படுகிறது இதனை இவ்வூர்த் தேவாரப் பதிகமும் குறிப்பிடுவது அறியத் தக்கது.

''நீரிடைத்துயின்றவன் தம்பி நீர் சாம்புவான்
போருடைச் சுக்ரீவன் அனுமான் தொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தாம்
சீருடைச் சேடர் வாழ்த்திருவு சாத்தானமே''

எனும் பாடல் மூலம் இராமன் வழிபாடு செய்ததை உணர முடியும்.

இத்திருக்கோயிலுக்கு அருகில் இராமர் கோயில், சாம்புவான்நடை, அனுமன்காடு, சுக்ரீவன் வழிபட்ட பேட்டை, தம்பிக்குநல்லான்பட்டினம் முதலியவை இன்றும் இருப்பது மேற்கூறிய புராண வரலாற்றுச் செய்திக்கு அரண் சேர்ப்பதை அறியலாம்.

இராமனுக்கு மந்திரஉபதேசம் செய்த காரணத்தினால் இவ்விறைவனுக்கு 'மந்திரபுரீசுவரர்' என்ற பெயர்

வழங்கப்படுகிறது. திருவுசாத்தானம் எனும் தேவாரப் பதிகம் குறிப்பிடும் இவ்வூர், தற்போது 'கோயிலூர்' என வழங்கி வருகிறது.

**வருணன், மார்க்கண்டேயர்:**

குட்டநோயுற்றும், அறிவு திரிந்தும் வருந்திய வருணன் இத்திருக்கோயிலை அடைந்து இறைவனை வழிபட்டு நலமுற்றான். மார்க்கண்டேயர் எமன் வீசிய பாசக்கயிற்றினால் ஏற்பட்ட வடுக்கள் நீங்க, இத்திருக்கோயிலில் வந்து தன் பெயரால் தீர்த்தம் உண்டாக்கி, அதில் நீராடி இறைவனை வழிபட்டு வடு நீங்கப்பெற்றார். இந்திரன், விசுவாமித்திரர், சுக்ரீவன் சாம்புவான் இவர்கள் அனைவரும் இவ்விறைவனை வழிபட்டு அருள் பெற்றதனைத் தல வரலாறு தெரிவிக்கிறது.

**திருக்கோயில் வரலாறு:**

இவ்வூர் நுழைவாயிலில் அமைந்திருக்கும் அருள்மிகு மந்திரபுரீசுவரர் திருக்கோயில் எனும் வளைவு நம்மை வரவேற்கிறது. இருபக்கமும் மதில்களைக் கொண்டு சிறப்பாக அமைந்திருக்கிறது. இருபுறமும் தென்னந் தோப்புகள் குளிர்தரு நிழலாய், அழகு மிக்கதாய் அமைந்திருக்கிறது.

இது பழமையான தோற்றத்துடன் காட்சியளிக்கிறது. எனவே, பிற்காலச் சோழர் காலத்தது எனலாம். இத்திருக் கோயிலில் ஐம்பத்து நான்கு கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ளன. இவையாவும் பிற்காலச் சோழர் காலத்தவையும், ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தவையும் ஆகும்.

இது பிற்காலச் சோழர் காலக் கற்றளியாக இருப்பினும், மூலவர் திருக்கோயில் மட்டும் முற்காலச்

சோழர் காலத்திய 'செங்கற் கட்டுமானமாக இருந்திருக்க வேண்டும்.' சுற்றுக் கோயில்களும், பல்வேறு திருப்பணிகளும் பிற்காலச் சோழ மன்னர்களால் நிகழ்த்தப்பட்டிருப்பதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. திருபுவனம் சக்கரவர்த்தி இராசராசத் தேவரின் இருபதாம் ஆண்டில் புரோச்சக்குடையார் என்பவன், அம்மன் கோயிலாகிய திருக்காமக் கோட்டத்தில் பெரிய நாச்சியாரை எழுந்தருளி வித்தாக ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவ்வரசன் மூன்றாம் இராசராசனின் இரண்டாவது மகனாகச் சொல்லப்படுகிறது மூலவர் கோயிலில் 'கற்பகப்பிள்ளையார்' என்பவர் சில திருப்பணிகளைச் செய்துள்ளார். இவருடைய கண்காணியாய் விளங்கிய திருமாளிகைப் பிள்ளை ஆண்டார் பிரசன்ன தேவரும் சில திருப்பணிகளைச் செய்துள்ளார்.

இராசராசதேவரின் முப்பதாம் ஆட்சி ஆண்டில் கன்றாப்புடையார் என்பவர், மேலைத் திருநடை மாளிகையில் 'இருமுடிச்சோழபல்லவராயன்' என்பவன் புவனாபதி நாச்சியாரை எழுந்தருளிவித்தான். இத் தேவியார் திருமகளைக் குறிப்பதாகச் சொல்லப்படுகிறது. இம்மன்னனது இருபத்து மூன்றாம் ஆட்சி ஆண்டில் மும்முடிச் சோழபுரம் செம்பங்குடையான், திருச்சிற்றம் பலமுடையான் என்னும் வியாபாரி இக்கோயில் திருஞானம் பெற்ற பிள்ளையாரை (திருஞானசம்பந்தர்) எழுந்தருளிவித்த செய்தி கூறப்படுகிறது.

திருவுசாத்தானம் என்பது இவ்வூரின் பழம்பெயராய் இருப்பினும் தற்போது இதனைக் கோயிலூர் என்றே வழங்குகின்றனர். இவ்வாறு வழங்கப் பெறுவதற்கு இவ்வூர்க் கல்வெட்டுகளில் சான்றுகள் கிடைத்தில. ஆனால், முதலாம் இராசராசசோழரின் இருபத்தொன்ப

தாம் ஆண்டில் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டு ஒன்று தஞ்சை இராசராசேசுவரத்தில் இருக்கிறது. அதில் காணப்பெறும் செய்தியாவது;

'இந்நாட்டு புறங்கரம்பை நாட்டுக் கோயிலூர் புதுக்குடியாகிய கோதண்டராமர் சதுர்வேதி மங்கலத்துச் சபையர் இடக்கடவ திருப்பரிகாயஞ் செய்யும் மானியம் ஒன்று' என்னும் பகுதியால் கி.பி. 1014 முன்னரே கோயிலூர் என்னும் பெயர் இவ்வுசாத்தானத்திற்கு வழங்கப்பெற்று வந்துள்ளது புலனாகிறது.

**திருக்கோயிலமைப்புகள் :**

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. எதிரே திருக்குளம் ஒன்று உள்ளது. இக்குளக்கரையில் இறைவன் சன்னிதிக்கு நேர் எதிரே விநாயகர் திருக் கோயில் உள்ளது, இதன் இராசகோபுரம் ஐந்து நிலைகளையுடையது. இவ்வைந்து நிலைகளும் ஐம்பொறிகளை உணர்த்தும் வகையில் அமைப்பட்டிருக் கிறது. மூன்று நிலைகளையுடைய கருவறை விமானமும் அமைந்துள்ளன.

இத்திருக்கோயிலில் இரண்டு சுற்றுகள் உள்ளன. வெளிச்சுற்றில் 'மணிகர்னிகை' தீர்த்தம் உள்ளது. வடதிசையில் தெற்குப்பார்த்த சன்னிதியில் அம்மன் உள்ளது. வெளிச்சுற்றின் மேற்குப்புறத்தில் தலமரம் 'மா' உள்ளது. இங்குள்ள அம்மனின் பெயர் அருள்மிகு 'பெரிய நாயகி'.

இறைவன் சன்னிதிக்கு முன்பாக விநாயகர், கொடி மரம், நந்தி, பலிபீடம் உள்ளது. இவற்றைக்கடந்து உட்சென்றால் அதிகார நந்திகேசுரரை அடையலாம்.

திருக்கோயிலின் உள்ளே உள்ள திருச்சுற்றின் தெற்குப் பத்தியில் அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய திருவுருவங்கள் பெயர் மற்றும் வரலாற்றுக் குறிப்புகளுடன் அமைக்கப்பட்டுள்ளன. இதனையடுத்துச் சப்த மாதர்களுடைய திருவுருவங்கள் உள்ளன. மேற்குப் பத்தியில் விசுவநாதர், விசாலாட்சி, சூதவன விநாயகர், சோமாஸ்கந்தர், வருணன், மார்க்கண்டேயர், 'இராமர் முதலியோர் வழிபட்ட சிவலிங்கங்கள் உள்ளன. இதனையடுத்து அன்னபூரணி அம்மனும், முருகப்பெருமான் சன்னிதியும், அதற்கும் அடுத்தாற்போல் துர்க்கை, லெட்சுமி, சரசுவதி முதலிய தேவியரும் அமைக்கப் பட்டிருக்கின்றனர். வடக்குப்பத்தியில் நவகன்னியர் உருவங்களும் உள்ளன.

இறைவன் சன்னிதிக்கு எதிர்ப்புறம் தெற்குப்பார்த்த சன்னிதியில் நடராசர் சபை உள்ளது. இத்திருக்கோயிலில் விசுவாமித்திரருக்கு இந்நடராசப் பெருமான் திருநடனக் காட்சி காட்டியதாகக் கூறுகின்றனர். கீழ்த் திருமாளிகைப் பத்தியில் பைரவர் விளங்குகிறார். வாயிலின் உட்பக்கம் இரு புறங்களிலும் முறையே சூரிய, சந்திரர் உள்ளனர்.

கோஷ்டங்களில் தெற்கே சுரதேவரும், அதனை அடுத்து வடக்கே தெட்சிணாமூர்த்தியும், மேற்கே இலிங்கோத்பவரும், பிரமன், துர்க்கை ஆகியோரும் உள்ளனர். இறைவன் சன்னிதியானது கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், இடைநாழிகை, மகாமண்டபம், நிருத்தமண்டபம், ஆஸ்தான மண்டபம் எனமுறையோடு அமைந்துள்ளது.

இறைவன் சன்னிதியில் மண்டபவாயிலில் சங்கநிதி, பதுமநிதி தெய்வங்கள் காட்சி தருகின்றன. நிருத்த மண்டபத்தில் திருவுலாப் போகும் திருவுருவங்கள் உள்ளன. இறைவன் சன்னிதியின் வாயிலில் விநாயகர், துவாரபாலகர்கள் உள்ளனர். இதனைக்கடந்து உள்ளே

சென்றால் இறைவன் சன்னிதியாகும். இறைவனின் பெயர் அருள்மிகு மந்திரபுரீசுவரர். லிங்கம், சுயம்புலிங்கம். அது வெண்ணிற வண்ணத்தில் சற்று சாய்ந்தநிலையில் உள்ளது. இவ்வெண்ணிற வண்ணத்தில் அமைந்திருக்கும் சிவலிங்கத்திற்குப் புராணச் செய்தி ஒன்று கூறப்படுகிறது.

ஆதிசேடன் இத்திருக்கோயிலைத் திருப்பணி செய்து வழிபட்டார் என்றும், கருடபகவான் வான் வழியாக அமுத கலசத்தை ஏந்திச் சென்றபோது சிந்திய அமுதம் இத்திருக்கோயிலின் இறைவன் மீதுபட்டதால், இச் சிவலிங்கம் வெண்மை நிறம் பெற்றது என்று இத் திருக்கோயில் வரலாறு தெரிவிக்கிறது. இச்சிவலிங்கம் வெண்மை நிறமாகவே உள்ளது.

**படிமச் சிற்பங்கள்:**

இத்திருக்கோயில் படிமச்சிற்பங்கள், ஓரிரண்டு குறிப்பிடும்படி அமைந்துள்ளது. இச்சிற்பங்கள் அழகிய வடிவில் அமைக்கப்பட்டுள்ளன. இத்திருக்கோயிலில் அமைந்துள்ள பெரியநாயகி அம்மன் சன்னிதியின் முகப்பு வாயிலிலுள்ள தூண்களில் இச்சிற்பங்கள் காணப்படு கின்றன. இங்கு உள்ள சிற்பங்களாவன, முருகர் நிற்பது போன்ற வடிவம், லெட்சுமி, சரசுவதிபோன்ற திருவுருவங்கள் வலதுபக்கம் உள்ள தூணில் விநாயகர் நிற்பது போன்ற வடிவம், மார்க்கண்டேயர் சிவலிங் கத்திற்கு வழிபாடு செய்வது போல் அமைந்த வடிவம், எட்டு லெட்சுமிகளின் வடிவங்கள், ராஜராஜேஸ்வரியின் நின்ற கோலம் எனப்பல்வேறு வடிவங்கள் இத்திருக் கோயிலிலே அமைந்துள்ளன.

**கல்சிற்பம்:**

இங்குச் 'சுரதேவர்' என்னும் சிற்பத் திருமேனி சிறப்புடையதாக உள்ளது. இறைவனின் எட்டுத் திருவுருவங்களுள் இம்மூர்த்தியும் ஒருவர். இத்திருவுரு

வத்தில் மூன்று முகம் உள்ளது. ஒரு முகம் நேராக நோக்கியவாறும், மற்ற இரண்டு முகங்களும் இருபக்கம் நோக்கிய வாறும் உள்ளது. மூன்று கால்கள், மூன்று கைகள் அமைந்திருக்கின்றன. இரண்டு கால்கள் ஊன்றியபடியும், ஒரு கால் மட்டும் நடராசரைப் போல் ஒரு கையும் எதிர்த்திசையில் நீட்டிய வாறும் உள்ளது மற்ற கைகளில் உடுக்கையும், அக்கினிச்சுடரும் ஏந்தப் பட்டுள்ளன. இது படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழிலையும் புரிகின்ற மும்மூர்த்திகளைக் குறிப்பதாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இது இத் திருக்கோயிலின் உட்பிரகாரத்தின் தெற்கு கோஷ்டத்தில் அமைக்கப்பட்டுள்ளது. சிறிய உருவமாக அழகிய நிலையில் அமைந்திருக்கின்றது.

**நடராசர் விக்கிரகம்:**

கோயிலூர் அருள்மிகு மந்திரபுரீசுவரர் திருக்கோயி லில் நடராசத்திருமேனிகள் இரண்டு உள்ளன. இதில் பெரிய நடராசரின் திருவுருவம் ஆனந்ததாண்டவ அமைப்பில் உள்ளது. இந்நடராசருக்குத் தனிச் சிறப்பு ஒன்றுண்டு. நடராசரின் தூக்கியதிருவடி பிற கோயில்களில் இருப்பன போல் உட்பக்கமாக வளைந் திராமல் புறவடி வெளியில் தெரியும்படி அமைந்துள்ளது. முகம் சற்று சாய்வாக அமைந்துள்ளது இவ்விக்கிரகத் திருமேனி எழில்மிக்கதாய் அமைந்துள்ளது.

**வழிபாடுகள்:**

இத்திருக்கோயிலில் நான்கு கால வழிபாடு நடைபெறுகிறது வழிபாடுகள் அனைத்தும் ஆகம முறையில் நடைபெறுகிறது.

**திருவிழாக்கள்:**

ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் பிரம்மோத்சவ விழா பெருவிழாவாக நடைபெறுகிறது. பத்து நாட்கள்

வரையில் பெருமான் பல வாகனங்களில் வீதியுலா வருவார். சித்திரை பூரணையில் தீர்த்த வாரி நிகழ்கிறது. ஆடிப்பூரம், ஆவணிமூலம், நவராத்திரி, கந்தர்சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம், மாசிமகம் முதலிய மாத விழாக்களும் நடைபெறுகின்றன. திருவாதிரைக்கு, பத்து நாட்களும் மாணிக்கவாசகர் பெருமானுக்குக் காப்புக்கட்டி இரண்டும் காலமும் முறையோடு திருவெம்பாவை பாடப்படுகிறது.

திருவாதிரை நாளில் நடராசர் பெருமான் வீதியுலாக் காட்சி சிறப்பாக நடைபெறும். நவராத்திரியில் அம்மன் கொலு வீற்றிருப்பாள். விஜயதசமி நாளில் குதிரை வாகனம் புறப்பாடு நிகழும். மார்கழியில் திருப் பள்ளி எழுச்சி பாடப்பெறுகிறது. திருப்பாவை திருவெம்பாவை மாநாடும் நடத்தப்பட்டு வருகிறது.

**கல்வெட்டுகள்:**

இத்திருக்கோயிலில் மொத்தம் 53 கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகள் அனைத்தும் திருக்கோயிலின் உட்புறச் சுவர்களிலும், முன் மண்டபங்களிலும் அமைந் திருக்கின்றன. இவைகள் பிற்காலச் சோழர் காலத்தவையாக உள்ளன. கல்வெட்டுகள் அனைத்தும் தமிழிலேயே உள்ளது இவ்வூர்க் கல்வெட்டுகள் 1 முதல் 54 வரை பதிவு செய்யப்பட்டுள்ளது. இக்கல்வெட்டுகளில் சிலவற்றைக் காணலாம்.

இத்திருக்கோயிலின் முன்மண்டப வடக்குச் சுவரின் வெளிப்பக்கம் உள்ள கல்வெட்டுஒன்று, விக்கிரமசோழனின் ஐந்தாம் ஆட்சி ஆண்டில் (கி. பி. 1123) வெளியிடப் பெற்றுள்ளது. இக்கல்வெட்டில் கேரளகுலாசனி சதுர்வேதி மங்கலத்து நிலம், தேவதான இறையிலியாகக் கொடுக்கப்பட்டது. ஊரின் பெயரும் விக்கிரம சோழநல்லூர் என்று மாற்றப்பட்டுள்ளதைத் தெரிவிக்கி றது இரண்டாம் இராசராசனின் முப்பத்தெட்டாம்

ஆட்சி (கி. பி. 12) ஆண்டில் வெளியிடப்பெற்ற கல்வெட்டொன்றில் 'திருவுசாத்தான முடையார் கோயிலுக்கு உரிய இறையிலி நிலத்திற்கும் திருவிளக்குப் புறமாக அளிக்கப்பட்ட நிலத்திற்கும், எல்லைகள் கூறப் பட்டிருக்கின்றன. எல்லைகளாகக் கூறப்படும் நிலத்திற்கும் அளவுகள் எண்ணாலும் எழுத்தாலும் கூறப்படுகின்றன. நிலத்திற்கு நீர்பாய்கிற வாய்க்கால்கள், ஆறுகளின் பெயர்களும் அந்தணர்கள் பலரின் நிலங்களும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன.

இராசராசனின் 20 ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1236) வெளியிடப் பெற்ற கல்வெட்டில் சதுர்வேதி மங்கலத்து மகாசபையோரும் ஊர்க்கணக்கும் சேர்ந்து, பெருமான் திருமேனியைக் கலியாண திருமேனியாக எழுந்தருள வித்தனர். பிள்ளை இருங்கோளற்கு விஜயமார்க்க மாகவும், பிள்ளை புரோகைக்குடையார் சாக்கணமாக கேரளகுலாசனிச் சதுர்வேதி மங்கலத்து திருவு சாத்தானமுடைய நாயனார் கோயில் எழுந்தருளுவித்த திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியாருக்கு அமுதுபடிக்கும், சாத்துப்படிக்கும் நிலம் தானமாக அளித்த செய்தியை இக்கல்வெட்டுக் கூறுகிறது. 'உலகமாதேவிவதி', வீரநாராயணவாய்க்கால்' ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.

இம்மன்னனின் 21 ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப் பெற்ற கல்வெட்டில் 'கோமடம்' என்றதொரு மடம் இருந்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

மூன்றாம் இராசேந்திரனின் 4ஆம் ஆட்சி (கி.பி.1250) ஆண்டில் வெளியிடப் பெற்ற கல்வெட்டு ஒன்றில் கோயில் தேவதான குடிமக்கள் தாங்கள் உழுகின்ற நிலத்தில் காணி வீதம் இந்நாயனார்க் கோயில் திருப்பணிக்குக் கொடுத்த செய்தியையும், கொடாது போனால் கட்டாயப் படுத்திப் பெற்றுக் கொள்ளுமாறும் இசைந்து எழுதிக்கொடுத்ததாக இக்கல்வெட்டுச் செய்தி கூறுகிறது.

மேற்படி மன்னன் காலத்திலேயே வெளியிடப் பெற்ற மற்றொரு கல்வெட்டில் இத்திருக் கோயிலிலுள்ள ஆதி சண்டேசுவர தேவகன்மிகளுக்கு இக்கோயில் தேவரடியார் பெண்டுகள் 14 பேர் விளக்கெரிக்க, காசு தானமாகக் கொடுத்த செய்தி காணப்படுகிறது. இதனின்று மாறு பட்டால் மாறுபடுவோரது சுக துக்கங்களில் பிறர் பங்கு கொள்ளல் கூடாது என்று முடிவெடுத்த செய்தியும் உள்ளது.

இராசேந்திரசோழனின் 11 ஆம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த (கி.பி. 1257) கல்வெட்டு ஒன்றில் இளவரசரின் கருத்துப்படி மும்முடி சோழபுரத்து ஊரார் இட்ட ஆணை இது. ஜனநாதன் பாதையின் வழியாகச் செல்லும் நெல், அரிசி ஏற்றப்பட்ட ஒவ்வொரு வண்டியும் வரிகட்டுதல் வேண்டும். அவ்வரியினைக் கோயிலுக்கு அளித்த செய்தியும் தெரிவிக்கப்படுகிறது,

சுந்தரபாண்டியனின் இரண்டாம் ஆட்சிக் கல்வெட்டு ஒன்று 'இராஜ நாராயண விழுப்பரையனின் ஆணையின் படி ஒரு மண்டபம் எடுத்து, ஒரு தோப்பும் கொடுத்த செய்தி குறிக்கப்படுகிறது.

மற்றைய கல்வெட்டுகள் அனைத்தும் நந்தாவிளக்கு எரிப்பதற்குத் தானம் கொடுத்த செய்தியையும், இறைவனுக்கும், வழிபாட்டுக்கும் நிலம் அளிக்கப்பெற்ற செய்தியையுமே தெரிவிக்கின்றன.

திருத்தங்கூரில் தொடங்கி கோயிலூர் வரை தேவாரப் பாடல் பெற்ற ஏழு தலங்களாகிய் 'இதன் கீழ்க் கடற்கரைத் தேவாரத் திருத்தலங்கள்' எனும் அமைப்பின் கீழ் உள்ள ஏழினையும் கண்ட மகிழ்வோடும், வழிபட்ட நிறைவோடும், அப்பெருமானை நினைந்து மகிழ்கிறோம்.